*Kumaraṉ*

*Āram 5, muttu 5*

*September 15, 1927*

Record no. 313

Registered No. M. 1823
Tel: KUMARAN, KARAIKUDI.

உ
சிவமயம்.

தனிப்பிரதி
விலை அணு ஒன்றரை.




" என்கடன் பணிசெய்து கிடப்பதே. "

(வாரப் பதிப்பு.)

வியாழன் தோறும் வெளியிடப் பெறுவது.

" கதரே உயிர். "        " கருணையே தெய்வம். "

ஆரம் ரு. } முத்து ரு. }   காரைக்குடி. பிரபவ-ஞூ ஆவணி-மீ ௩௦-உ (15—9—27.)   { கஅ பக்கங்கள்.

# கமலத்தின் காதல்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.

முன்னொரு காலத்தில் பலவகை வளங்களும் பொருந்தித் திகழ்ந்த பழையனூர் என்னும் சிற்றூரில் வேளாண்மையாலுயர்ந்த விழுமிய குலத்தில் அழகிற் சிறந்த ஓர் ஆண்மகன் தோன்றினன். கோலமாமஞ்ஞை மீது குலவும் குமரனது அருளால் பிறந்த அம்மைந்தனுக்கு முருகன் என்று பெயரமைத்தார்கள். இளங்கதிர்போல் இலங்கிய முருகன் இளமையிலேயே அருங்கலை பயின்று இனிய மதிநலம் வாய்ந்து விளங்கினன். இம்மைந்தன் கலைபயின்ற கல்லூரியிற் கற்பகத்தின் பூங் கொம்பு போன்ற ஓர் கன்னியும் கல்வி கற்று வந்தாள். கலைபயில் தெளிவும் காட்சிக்கினிமையும் அமைந்த கன்னியின் தன்மை கண்ட முருகன் அவள்பால் காதலுற்றான். அம்மங்கையின் குலம் தன்மரபிற் சிறிது தாழ்ந்ததாயிருப்பினும் அவளது நலத்தைக் குலத்தினும் பெரிதாகப் போற்றினன். கமலம்என்னும்பெயர் அமைந்த அம்மங்கையும் முருகனது குணத்தையும் நலத்தையும் கண்டு அவன் மீது மையலுற்றாள். ஆயினும் பழம் பெருமை பாராட்டிக் குலக்கோடுமை நின்று கூத்தாடும் பழையனூரில் தன் எண்ணம் பழுதாகுமென்று பயந்து அருங்காதலைத் தன் மனத்திலேயே அடக்கி வைத்தாள். இவ்வாறு இரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர் முருகனது பெற்றோர் மைந்தனுக்கு மணவணி காணக்கருதித் தம் குலத்திற் குன்றாக் கொழுங்குடியில் நல்ல குணம்வாய்ந்த நங்கையை நாடினார்கள். இதை அறிந்த மைந்தன் மனம் நொந்து தான் காதலித்த கமலத்தை அன்றி மற்றொரு மங்கையை மணப்பதில்லை என்று மனவுறுதி கொண்டான். ஆயினும் கமலம் தன்னைக் காதலனாக ஏற்றுக் கொள்வாளோ என்று அறிய ஆவலுற்றான். ஒரு நாள் கல்லூரியினின்றும் இருவரும் தனியாய் வருகையில் முருகன் தனது மனத்தில் எழுந்த காதலை மங்கையிடம் கரவாது உரைத்தான். அப்போது நிறை அமைந்த அம்மங்கை நாணத்தால் தலைகவிழ்ந்து புன்முறுவல் பூத்து நின்றாள். மங்கையின் காதலைக் குறிப்பால் உணர்ந்த முருகன் மனமகிழ்ந்து "கமலத்தை அன்றி மற்றொரு மாதை மனத்திலும் நினையேன்" என்று உறுதி கூறினன். அதுகேட்ட நங்கை, பொங்கி எழுந்த பேரன்பால் தலைமகனை நோக்கி, " ஐயனே, முருகனே! என் முன்னே வந்து எதிர் தோன்றும் உன்னையன்றி மற்றொரு தலைவனைக் கனவிலும் கருதேன், உன்னை எய்தப் பெறேனாயின் உயிர் துறப்பேன்" என்று மெல்லிய மொழிகளால் இனிது எடுத்துரைத்தாள். இவ்வாறு காதலாற் பிணிப்புற்ற இருவரும் அன்று பிரிந்து தத்தம் மனையகம் சேர்ந்தார்கள்.

*    *    *

சில நாள் சென்ற பின்னர் முருகனது பெற்றோர் குலத்திலும் நலத்திலும் குன்றாத காராள மரபில் ஓர் கன்னியை மணம் பேசிமுடித்தார்கள். திருமணத்திற் குரிய வேலைகள் எல்லாம் திருத்தமாய் நடைபெற்றன. பொன்னாலும் மணியாலும் அழகிய அணிகள் செய்யப்பட்டன. மனம் பொருந்தா மணத்திற் கிசையாத முருகன், தாய் தந்தையர் மொழி திறம்பாத்தன்மை வாய்ந்தவனாதலின் தன் நெஞ்சில் நீங்காது நின்ற நங்கைக்குத் தன் கருத்தை அறிவித்து மறையக் கருதினன். அவ்வாறே தன் எண்ணத்தை ஓர் ஓலையில் எழுதி கமலத்தின் அறையினுள்ளே மெல்லத் தள்ளிவிட்டு நள்ளிரவில் எவரும் அறியாதவாறு முருகன் மறைந்தான்.

*    *    *

மறுநாட் காலையில் மைந்தனைக் காணாத பெற்றோர் மனம் உலைந்து நாடு நாடெங்கும் தேடி அலைந்தார்கள். மணமகனைக் காணாத மாற்றம் ஊர் முழுவதும் பரவிற்று. பொழுது புலரும் பொழுது கண்விழித்த கமலம் தன் அறையில் ஓர் சுருளோலை கிடக்கக்கண்டு அதனை நெகிழ்த்துநோக்கினள், திகைத்தாள். மெய் நடுங்கினள். கண் கலங்கிக் கண்ணீர் உகுத்தாள். கண்ணீரைத் துடைத்து மீண்டும் ஓலையைக் கண்ணினால் நோக்கினள். "கமலமே என் கண்ணே; நான் உன்னை விட்டுப் போகின்றேன்; என்னை நீ இனி காணாய்" என்ற மொழிகளைக் கண்டு கலங்கினாள். மயங்கினாள். "மற்றொரு மங்கையைமணந்து வாழ்வதினும் ஆவி துறப்பதே இனிதாகும், என்று முருகன்துணிந்தானோ? ஐயோ,முருகா, பேதையாய என்பால்வைத்த நேயத்தால் நின் ஆவி துறக்கவும் நேர்ந்ததோ! அப்பா, வருந்தி அழைத்தால் நீ வாராயோ? 'நெஞ்சில் ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும் முருகா என்றோதுவார்முன்' என்னும் பொய்யா மொழியும் பொய்த்ததோ! அந்தோ. அன்பனைக் காணாது என் நெஞ்சம் அலறுகின்றதே. என் செய்வேன்" என்று மயங்கிச் சோர்ந்தாள். அப்பால் ஒருவாறு மயக்கம் தெளிந்து முருகனையே நினைத்து நெஞ்சம் குழைந்து ஊண் உறக்கமின்றி மெலிந்து நலிந்தாள். தன்பால் வைத்த தலையாய அன்பினால் ஆவியிழந்த முருகனை மறவாது இவ்வுலக இன்பத்தை அறவே வெறுத்தாள். காதலனைக் கருத்தில் அமைத்துக் கன்னிமாடம் புகுந்து தவம் புரிந்து காலங்கழிக்கக் கருதினாள். அவ்வாறே தன் கருத்தைப் பெற்றோரிடம் அறிவித்து நான்கு காதவழி தூரத்தில் அமைந்திருந்த நல்லூர்க் கன்னிமாடம் சென்று சேர்ந்தாள். அங்கு மாதவமியற்றி மனத்துக்கண் மாசின்றி வாழ்ந்த மங்கையரால் வழிபடும் பெருமை வாய்ந்து விளங்கினாள்.

'ஆடவர் தனதிடத் தருகு போகினும்
நாடி மற்றவர் பெயர் நயந்து கேட்பினும்
வீடேவல் உயிரென வெகுளும் மற்றவள்
சேடியர் வழிபடச் செல்லும் செல்வியே'

என்று யாவரும் கமலச் செல்வியைக் கண்ணினும் அருமையாய்ப் போற்றிப் புகழ்ந்தார்கள். ஒவ்வொரு நாளும் கன்னிமாடத்தில் கடுந்தவம் புரிவதும் அந்திமாலையில் அந்நல்லூரில் அமைந்த நாதனை மனம் மெய் மொழிகளால் வழிபடுவதுமே அம்மங்கையின் வாழ்க்கை நெறியாய் அமைந்தது. நன்னெறி காட்டும் நல்லூர்ப் பெருமான் முன்னே நின்று அன்பினால் அகம் குழைந்து,

" நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானை
காத்த நெறியானை கைகூப்பித் தொழுது
ஏத்தும் அடியார்கட் கில்லை இடர்தானே "

என்று கனிந்து பாடிக் கண்ணீர் உகுப்பாள். இவ்வாறு ஆறு ஆண்டுகள் அகன்றன!

*    *    *

அப்பொழுது நல்லூர்ப் பெருமானை அறிவிற் சிறந்த முனிவர் ஒருவர் வழுத்தி வணங்கி நாள்தோறும் மும்முறை வழிபாடு இயற்றிவந்தார். காட்டில் கிடைக்கும் காய்கனிகளை அருந்தி கடுந்தவம் புரிந்த அம்முனிவர் கற்றோர் யாவரும் அறியா அறிவினராய், செற்றம் நீக்கிய மனத்தினராய் விரையுறு நறுமலரேந்தி இறைவனை அன்பினால் இன்புற வணங்கி காதலால் கசிந்து கண்ணீர் வடிப்பார். இவ்வாறு நல்லாற்றினின்று நாதனைப் போற்றிய முனிவனது பெருமையைத் தன் கண்களால் கண்ட கமலம், அவரே தன் மன நோய் தீர்க்கும் மருந்தென்றெண்ணினாள். இவ்வாறிருக்கையில் ஒருநாள் அந்தி மாலையில் இறைவனை வழிபடச் சென்ற கமலம் அருகே எவரும் இல்லாமை கண்டு தன் மனத்துயரை நல்லூர்ப் பெருமானிடம் சொல்லி முறையிட்டாள். "நாதனே! நல்லூர்ப் பெருமானே! என்னைப் போல் பாவியர் இவ்வுலகில் உண்டோ? அறிவும் அழகும் அமைந்த முருகன் என்னால் ஆவி துறந்தும், நான் உண்டு உயிர் வாழ்ந்திருக்கின்றேனே! என்னைக் காதலித்த கடும்பிழையால் உயிர் நீத்த முருகன் பின்னே செல்லாத பாவியேன் கன்னிமாடத்தில் காலங்கழிக்கின்றேனே! ஐயனே, எனது பெரும் பிழையைப் பொறுத்து என்னையும் அழையாயோ ?" என்று அழுது அகங்குழைந்து நின்றாள்.

*    *    *

அந்நிலையில் இறைவனருகே மறைவில் நின்று பணி செய்த முனிவர் மங்கையின் துயரை அறிந்து மனம் கரைந்து கண்கலங்கி வெளியே வந்து ஈரமளாவிய இனிய மொழிகளால் "அம்மையே, ஏழை பங்காளனான இறைவன் உன் அருந்துயரை மாற்றி அருள் செய்வான்" என்றுகண்ணீர்பெருக்கினார். தன் துயரைக்கண்டு மனம் கரையும் முனிவனது கருணையைக்கண்டு ஆற்றாத மங்கை அவரை நோக்கி 'ஐயனே! நன்மை யொன்றறியா நங்கைக்காக அருங்கலை அறிந்த தாங்கள் வருந்தித் தளர்வது தகாது! அன்றும் ஓர் அன்பனுக்கு ஆராத்துயர் விளைத்தேன். இன்றும் முனிவராய உமது உள்ளத்தைவருத்தினேன். இவ்வாறு நல்லோர்க்குத் துயர் விளைக்குமாறு பாவியேன் இவ்வுலகில் பிறந்தேன்?' என்று மனம் நொந்தாள். அப்போது முனிவர் மங்கையின் தூய தன்மையை நினைந்து மீண்டும் கண்ணீருகுத்தார். முனிவரது கனிந்த மனப்பான்மையைக்கண்ட கமலம் கைகுவித்துத் தொழுது, 'ஐயனே! பாவியேன் செய்த பாவம் மலையினும் பெரிதாகும், முருகனைக் காணாத துயரத்தால் நானும் இன்னும் சிலபொழுதில் இறந்து ஒழிவேன். அவ்வாறு நான் ஆவி துறப்பினும் மீண்டும் இம்மண்ணுலகில் பிறந்து முருகனையே மணம் புரியக் கருதுகிறேன்; அக்கருத்தறிந்து முடிக்குமாறு இறைவனை எனக்காகத் தாம் வழிபட வேண்டும்.

"ஈண்டு நான் இருந்து
இன்னுயிர் மாயினும்
மீண்டும் வந்து பிறந்து
நன் மேனியைத்
தீண்ட லாவதோர்
தீவினை தீர்வாம்
வேண்டினன் தொழு
தென்று விளம்புவாய்"

என்று மங்கை சொல்லியமாற்றம் கேட்டு முனிவர் மனம் குழைந்து கமலத்தை தன் அருள்நிறைந்த கண்களால் நோக்கி, "மாதே உனது கண்ணை விட்டகலாத காதலன் உயிரிழந்தான், என்று ஐயமற அறிந்த பின்னல்லவோ, இத்தகையவரம் இறைவனிடம் பெற வேண்டும்! அவன் இருப்பின் நீ இறந்தாலும், மீண்டும் பிறத்தலும் விரும்பத்தகாதனவன்றோ!' என்று இனிய மொழிகளால் எடுத்துரைத்தார். தன் காதலன் உயிரோடிருக்கவும் கூடும் என்ற உரை கேட்ட மங்கை புதியதோர் ஊக்கம்பெற்று, மாதவமுனிவரை நோக்கி "ஐயனே, முக்காலமும் அறியவல்ல ஆன்றோர் என்று தங்களை அறிந்தோர் எல்லாம் போற்றித் தொழுகின்றார்கள். என் காதலன் எங்கேனும் வாழ்ந்திருக்கின்றான் என்று உறுதி சொல்வீர்களேயாயின் அதுவே எனக்கு இம்மை இன்பமும், மறுமை இன்பமும், ஆகும்" என்று எடுத்துரைத்தாள்.

*    *    *

அம்மெய்யுரை கேட்ட முனிவர் மனம் கரைந்து மங்கையின் மனத்தூய்மை கண்டு மகிழ்ந்து கருணை பொழியும் கண்களால் கமலத்தை நோக்கி " மாதே, இங்கு உன் முன்னே தோன்றும் முனிவனில் அமைந்த முருகனை அறியாது அவன் இறந்தான் என்று வருந்துவதாகுமோ" என்று மொழிந்து புன்னகைபூத்து நின்றார். மங்கையும் கொடிப் பொழுதல் முனிவனைக்கண்டு எல்லையற்ற இன்பமுற்று யாதும்பேச நாவெழாது நின்றாள்!

"இழந்த மணிபுற்றா
வெதிர்ந்த தெனலானாள்
பழந்தன மிழந்தன
படைத்தவரை ஒத்தாள்
குழந்தையை உயிர்த்த
மலடிக் குவமை கொண்டாள்
உழந்து விழிபெற்ற தொருயிர்ப்
பொறையும் ஒத்தாள் "

நல்மணியை இழந்த நாகம் அம்மணியை அடைந்தாற் போலவும், பழம் பொருளை இழந்தவன் மீண்டும் அதனைப் பெறுவார் போலவும், மகப்பேறில்லா மங்கை நன்மகவை ஈன்றாற் போலவும், கண்ணை முன் தான் மீண்டும் கண்ணோன் பெறுதல் போலவும், கமலம் மனம் களித்தாள். அப்போது முருகன் தான் எவருமறியாது நள்ளிரவில் பழயனூரினின்றும் போந்ததும் கமலத்தையன்றி மற்றொரு மாதை மணந்து இல்லறம் நடத்துவதினும் துறவறமே ஏற்ற நெறியென் றெண்ணி தூய காவியுடை புனைந்ததும், நல்லூரின் நன்மக்கள் விரும்புமாறு நாதனுக்கு வழிபாடு செய்ய இசைந்ததும் ஆகிய செயல்களை எல்லாம் விரிவாக எடுத்துரைத்து கமலத்தின் ஆசற்ற அன்பினை வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினன்!

*    *    *

அப்பால், மையறு மனத்தனாய மங்கையும், ஐம்புலம் வழுவாது நின்று மறுமையில் இருவரும் மணந்து இல்லறம் நிகழ்த்தும் பேறு பெறுமாறு இறைவனைப் பணிந்து போற்றினார்கள்!

அங்கம் II.

பிரபஞ்சபாலனுடைய பாசறை.

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

வேதபா:—தமது பல்லவப்படையைச் சார்ந்த இரண்டு வயோதிக வீரர்கள். ஹரிநந்தனைப்போற் றேன்றியது; மற்றவன் தேவசனகத்தானிருக்கவேண்டும்.

பிரபஞ்ச:—நன்று; ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்களனைவரையுமே விலங்கிட வேண்டுமென்று நான் கட்டளையிட்டாலும் அவர்களிருவரும் என்னை அநுசரிப்பார்கள். இருண்டுவிட்டது. விளக்கை யேற்று. நாழிகை யென்னவாயிற்று?

வேதபா:—அஸ்தமித்து அரை நாழிகை யாய்விட்டது.

பிரபஞ்ச:—மகரலோசனர் திரும்பி வரவில்லை?

வேதபா:—அகிழைக்காக்கும் படைக் காவலர் அவர் வந்தவுடனே தம்மிடமழைத்து வருவார்கள்.

பிரபஞ்ச:—என் ஆலோசனை நிராகரிக்கப்பட்டிருக்குமாயின் இதற்கு முன்பே அவர் இங்கு வந்திருப்பார். இம்முஹூர்த்தந்தான் தீர்மானஞ் செய்யப்போகின்றது; நிவாந்திரத்தில் அடைக்கப்பட்ட கைதிகள் தம்மைச் சுற்றியிருக்கும் இருளைப்பார்த்து விழிக்குந்தருணத்தில், தங்கள் மனோராஜ்யத்தில் ஆவலுடன் எதிர்பார்க்கின்ற கப்பல்களைப்போல் என் ஜீவிதத்தை முழுவதையுமிது தாங்கி நிற்கின்றது. ஓர் மானிடன் தன் பால்யத்தையும் தன் மூளையையும், தன் ஆன்மாவையும், தன் சுகத்தையும் துக்கத்தையும் எல்லாம் ஸ்திரீயின் காதல் என்ற ஓர் அற்பப்பொருளிடம் ஒப்புவிப்பது விந்தைதான்! எனது ஹாஸ்யத்தைப் பார்க்கிலும் அதுஊக்கமுடையதல்லாதிருப்பின் நானே அதனை நினைத்து மந்தஹாசம் செய்வேனே! மகரலோசனர் வந்து சேரவில்லை. ஆகவே அவன் நிச்சயமாக வருவான். போய் அவன் சம்மதத்தைக் கட்டியங்கூறுகின்ற ஆகாய தீபந்தெரிகின்றதோ வென்று பார்த்துவா! பிறர் வாழ்வுக்காகத் தன்னையே தத்தம் செய்து, தனது பிரஜைகளை ரக்ஷிப்பதைப்போல் எல்லையும் காப்பாற்றும் அவ்வனிதோத்தமியின் விறைக்கின்ற கால்நடைகளைக் கட்டியங்கூறுகின்ற தீபம் தெரிகின்றதோ பார்! வேண்டாம் நில்! நானே போகின்றேன். இம்முஹூர்த்தத்திற்காக நான் பால்யம் முதலே காத்திருந்தேன். காப்பதோடு ஆவலும் பட்டேன். ஆகவே என் கண்களையன்றி வேறு யாவருடைய கண்களும்,—என் ஆப்த நண்பனுடையவாயினுங்கூட—அதன் வரவை முதலாவதாகக் கண்டுகளிக்கலாகாது. (பாசறையின் வாயிலருகிற் சென்று, படுதாவை விலக்கி வெளியே தோன்றுகின்ற இரவை உற்றுப்பார்க்கிறான். ......பார் தீபத்தை. வேதபாலா! அந்த தீபத்தை! காரிருளில் அது எப்படி சலித்து மின்னுகின்றது பார்!......கீழக் கோபுரத்திலிருந்து—சரிதான், அவ்விதமே தான் ஏற்பாடு. என்னமாக இருளைத் துளைக்கின்றது பார்! நகரத்திலிப்பொழுது பிரகாசிக்கின்றதீபம அதுவொன்றுதான். ஆஹா! இவ்வளவு நாட்களாக நம்பிக்கையற்று எதிர்பார்த்திருந்த இவ்வளவு புகழுடைய புஷ்பத்தை மதுராபுரி இதுவரையிலுமுயர்த்தி மகிமைப்படுத்தியதே கிடையாதே! ஆ! வீரத்தன்மை பொருந்திய மதுராபுரிவாசிகளே! உங்களது சரித்திரங்களில் அழியாப் பட்டம் பெறத்தக்க கொண்டாட்டத்தை இன்றிரவு கொண்டாடப்போகின்றீர்கள்; அதினிடையே நானும் என் தாய் நகரத்தை ரக்ஷித்ததாலுண்டாகும் ஆனந்தத்தைப் பார்க்கிலும் மேலான ப்ரும்மானந்தத்தையு மறியப்போகின்றேன்.

வேதபா:—(அவனது கரத்தைத் தொட்டு) பாசறைக்குட் சென்றிடுவோம். அதோ த்ரைவல்க்யதேவர் வருகின்றார்.

பிரபஞ்ச:—(உள்ளே வந்து படுதாவை விடுத்து) சரி, அப்படியே. ஆயினும் நாம்

# தேவீ வதனு.

## ஓர் இனிய நாடகம்.

“ஆண்டி” எழுதியது.

[“மங்கல்யம்” “கனவோ நினைவோ?” “செல்வா யாசமிவ” முதலிய நாடகங்களின் ஆசிரியர்.]

சம்பாஷணையைச் சுருக்கவேண்டும். (சாய்வு மேஜையருகிற் சென்று கடிதங்களைக் கையிலெடுக்கிறான்) அவனெழுதிய மூன்று நிருபங்களும் உன்னிடமிருக்கின்றனவா?

வேதா:—இரண்டுதானே யுண்டு.

பிரபஞ்ச:—நான் நடுவழியே மறித்துக் கைப்பற்றிய இரண்டும் இன்று மாலை வந்த கட்டளையும்.

வேதபா:—முதலாவதுசொன்னவிரண்டு மிதோ விருக்கின்றன. மீதியுள்ளதைத் தாம் கையில் வைத்துப் பிசைகின்றீர்கள்.

பிரபஞ்ச:—அவன் வருகிறான்.

[காவலாளன் படுதாவை உயர்த்தி த்ரைவல்க்யன் பிரவேசம்.]

த்ரைவல்க்:—கோபுரத்திலிருந்து அடையாளங்கள் காட்டுவதைப் போன்ற பளீரென்றடிக்கின்ற, அசாதாரண தீபமொன்றைக் கவனித்தனையா?

பிரபஞ்ச:—அடையாளங்கள் தானென்றெண்ணுகின்றீரா?

த்ரைவல்:—சந்தேகமின்றி. பிரபஞ்சபாலா. நான் உன்னிடம் கொஞ்சம் கலந்து பேசவேண்டியிருக்கின்றது.

பிரபஞ்ச:—பேசுங்களேன். வேதபாலா! எங்களைத் தனியே விட்டுச்செல். ஆனல் வெகுதூரம் சென்றுவிடாதே. நான் உன்னை கூப்பிடுவேன். (வேதபாலன் போகிறான்.)

த்ரைவல்க்:—பிரபஞ்சபாலா! நான் உன் மீது வைத்திருக்கிற அபிமானத்தைப்பற்றி நீயே அறிந்திருக்கின்றாய். பல தடவை அதை உன்னிடம் ருஜூப்படுத்தியிருக்கிறேன்; ஆனல் நீ அறியாத விஷயங்கள் இன்னும் பலவிருக்கின்றன. எம்மனில் பாமர ஜனங்கள் வஞ்சகமென்றெண்ணியிருப்பதும், வாஸ்தவத்தில் எச்சரிக்கையும் நியாயமுமுடையதுமான சிங்கள ராஜ்ய முறைப்படி அவளுடைய அந்தரங்க ரகசியங்களை அறிந்திருப்பவரிடமிருந்துங்கூட இன்னும் பலவிஷயங்களை மறைக்கவேண்டி வருகின்றது. நாமனைவருமே தேசமாதாவின் தீர்க்காலோசனையுடைய கட்டளைகளை அனுசரிக்கின்றோம். அவளது முதிர்ச்சி பெற்ற புத்தி சக்தியிலிருந்துற்பத்தியாகிற பரம ரகசியங்களின் முக்கியத்தையுங்கூட தைரியமாக ஆதரிக்க வேண்டியவர்களுமாவோம். ஆகவே நான் உன்னிடம் சொல்லக் கூடியது யாதெனில், உன்னிளமையையும் குலமறியாப் பிறப்பையுங்கூடக் கருதாமல் இதுவரையிலும் நமது தேசத்தால் சேகரிக்கப்பட்ட படைகளில் வைத்து அதிகமகத்துவமான படையின் தலைமை ஸ்தானத்திற்கு உன்னையே தெரிந்தெடுக்கவென்று நான் அதிக முயற்சி செய்ததுண்டு. அச்செய்கையைப் பற்றி வருந்தும்படி நாளிது வரையிலும் ஒரு காரணமும் தோன்றியதாயில்லை. ஆனற் சிறிது நாட்களாக உனக்கெதிராக ஒரு கக்ஷி தோன்றவாரம்பித்திருக்கின்றது. இதை உன்னிடத்தில் வெளியிடுவது என் கட்டுக்கடமைக்கு மிஞ்சிவிட்டதோவென்று சந்தேகமாயிருக்கின்றது. ஆயினும் கடமைப்படியே வரம்பு தவறாது பற்றுவதுங்கூட முன்யோசனையின்றிச் செய்யுமுபகாரத்தைப் பார்க்கிலும் அதிக தோஷத்தை விளைவிக்கும் தருணங்களும் அடிக்கடித் தோன்றுவதுண்டு. ஆகவே, தீர்ப்பின்மைக்கும், சபல புத்திக்கும் அசட்டுத்தனத்துக்குமாக உன் மேல் கடுமையான பழிசாற்றும் சத்ருக்கள் இருக்கின்றனர் என்றறிந்துகொள். வேறு சிலர் உனது யஜமான விசுவாசத்தைப்பற்றிக்கூட அவநம்பிக்கை கொள்ளத் தொடங்கியிருக்கின்றனர். இவ்வித துர்போதனைகளை நிரூபிக்குமாறு மிக நுட்பமா யமைக்கப்பட்ட அவதூறுகளையுங்கூடக் கிளப்பிவிட்டிருக்கின்றனர். உன்மீது ஏற்கனவே துவெண்ணங்கொண்டிருந்த ஸமாஜிகர்களுக்கிடையில் அவை ஓர் கேடான எண்ணத்தையும் உண்டாக்கியிருக்கின்றது. அவர்களும் உன்னைக் கைது செய்து விசாரணை செய்தாலென்னவென்று கூட யோசனைசெய்யத் துடங்கிவிட்டனர். தெய்வானுகூலத்தாலிது தற்சமயம் எனக்குத் தெரியவந்தது. நான் உடனே சிங்களத்துக்கு விரைந்து சென்றமையால் ஒவ்வொரு குற்றத்திற்கும் தக்க சமாதானங்களை எளிதிற் கூறமுடிந்தது. நானே உனக்கு ஜாமீனாக நின்றேன். கணப்பொழுது கூட சந்தேகங்கொள்ளாமையால் நான் உன் மீது காட்டிய நம்பிக்கையை ருஜூப்படுத்த வேண்டியது இனி உன் கடமையாகும். ஏனெனில், நீ செய்கையொன்றும் செய்யாமலினியுமிருப்பாயானல் நாமிருவரும் தொலைந்தோம். என் கூட்டு மந்திரி மாலாதரர் சோழநாட்டுப் படைகளால் தேவகோட்டை யருகில் தாக்கப்பட்டிருக்கிறார். வடபக்கத்திலிருந்து வேறோர் படை சிங்களத்தை நோக்கி வருகின்றதாம். நம் நாடு அபாயகரமான நிலையிலிருக்கின்றது. ஆனல், நாமிவ்வளவு நாளாகச் செய்யக் காத்திருக்கும் தாக்கலை நீ நாளைக் காலையிலே நடத்துவாயானல் இவையனைத்தும் சரியாய்விடும். நமது ஒப்புயர்வற்ற சைன்யத்தையும் இதுவரையிலும் ஒரு நாளுமே ஜயலக்ஷ்மியின் கடாக்ஷம் தன்னை விட்டகலாமலிருந்த ஏக சேனுதிபதியையும் இதுவே விம்மாசனம் செய்யப்போகின்றது. நாமும் சிங்களத்துக்கு கொண்டாட்டத்துடனும் பிரதாபத்துடனும் திரும்பிச் செல்லும்பொழுது நேற்று உனக்கெதிராயிருந்தவர்களுங்கூட உன்னுடைய அதியுற்சாகமான அபிமானிகளாகவும் உன் கக்ஷியினராகவும் மாறிடுவர்.

பிரபஞ்ச:—தீர்ந்ததா உமக்கென்னுடன் பேசவேண்டியதெல்லாம்?

த்ரைவல்க்:—சுமாராக. ஆனலிதில் நான் உன்னிடம் பாராட்டிவருவதும், நமது பிரதிதின சகவாசத்தால் அதிகரித்துக்கொண்டுவருவதுமான உண்மையான என் அன்பைப்பற்றி மாத்திரம் பேசவில்லை. அதிலும் பார்ப்போருக்கு ஒன்றுக்கொன்று விரோதமாகத் தோன்றிடும சட்டங்களால் அடிக்கடி மிக சிரமமான ஆபத்துக்களை ஏற்படுத்தும் சந்தர்ப்பமாகிய இந்த சந்தர்ப்பத்திற்கூடப் பேசத்துணியவில்லை; ஏனெனில் அச்சட்டங்கள் நானின்று தாழ்மையான பிரதிநிதித்வம் வகிக்கின்ற சிங்களத்தின் மறைபொருளான சக்தியைச் சில சந்தர்ப்பங்களில்—அதாவது அபாயகாலங்களில்—சேனுதிபதியின் அதிகாரத்திற்குச் சமமாக்கவேணடுமென்று வற்புறுத்துபவைகளாகும்.

பிரபஞ்ச:—எனக்குச் சற்று முன்பாகக் கிடைத்த இக்கட்டளை தாம் எழுதியது தானா?

த்ரைவல்க்:—ஆம்.

பிரபஞ்ச:—தமது சொந்தக் கையால்?

த்ரைவல்க்:—சந்தேகமின்றி. ஏனிந்தக் கேள்வி?

பிரபஞ்ச:—இவ்விரு நிருபங்களையும் அறிக்கையிடுகிறீர்களா தாங்கள்?

த்ரைவல்க்:—இருக்கலாம். எனக்குத் தெரியாது. அவைகளில் என்ன அடங்கியிருக்கின்றன? நான் முதலாவது ... ...

பிரபஞ்ச:— அதற்கு அவசியமேயில்லை. நானறிவேன்.

த்ரைவல்க்:—நீ செய்வாய் என்று நான் எண்ணியிருந்ததைப்போல் வழியில் நீ தடை செய்து கைப்பற்றிய அவ்விரு நிருபங்களுந்தானா? சரிதான். என் சோதனை பலித்துவிட்டதே!

பிரபஞ்ச:—பச்சைக் குழந்தையிடமல்ல தமது ஊடாட்டம். இத்தகைய உதவாத ஏமாற்றங்களுக்குள் மறுபடியும் சென்று நாம் குதிக்கவேண்டாம். நான் சீக்கிரம் முடிக்கவேண்டுமென் றாவலுடனிருக்கின்றதும், சிங்களத்தில் எனக்குக் கிடைக்கக் கூடிய எப்படிப்பட்ட ஜெய கோஷமும் அதற்கு நிகராகாத பிரதி பலத்தைத் தாமதப்படுத்துகின்றதுமான ஓர் சம்பாஷணையை வீணாக நீடிக்கவும் வேண்டாம். இந் நிருபங்களில் என்னுடைய எல்லாச் செய்கைகளையும் அக்கிரமமாகவும் அசத்யமாகவும் கண்டித்திருக்கின்றீரே நீர். இது கேவலம் க்ஷாத்திரமா? அல்லது வஞ்சகமும் அத்யாக்கிரஹமுமுடைய சிங்களம் வெற்றியுடன் வந்த கூலி வேலைக்காரனை ஏமாற்றுவதற்கென நிர்மிக்கவேண்டி வந்த சாக்கா? இக் கடிதங்களில் எல்லாவற்றையும் வக்கிரமாகப் புரட்டியிருப்பதன் கொடிய நுட்பத்தைக் கண்டு நானே என் பரிசுத்தத் தன்மையைப்பற்றிச் சந்தேகப்பட்டுப் போய் விட்டேனே! என் எல்லாச் செயல்களையும விகாரப்படுத்தி, அவமதித்து மங்கச் செய்திருக்கின்றது; அதிலும் இந்த முற்றுகை ஆரம்பித்த வாரம் முதல் நான் தமது சந்தேகத்தை நிவிருத்திசெய்யத் தீர்மானித்து என் கண்களைத் திறந்து வைத்த சுபமுகூர்த்தம் வரையிலுமா? தமது நிருபங்களைப் போல் கவனமாகப் போலிக் கடிதங்கள் தயார் செய்து சிங்களத்திற் கனுப்பினேன். அவைகளின் பதில்களையும் வழி மறித்து வாங்கிப் பார்த்தேன். தமது வார்த்தைகள் அங்கிகரிக்கப்பட்டன; தம்மை நம்பிவிட்டார்கள். அவர்களே என்மீது சாற்ற வேண்டிய குற்றத்தின் கருத்தை உமக்கறிவித்திருக்கும்பொழுது அதற்கும் சந்தேகமா? எனக்கறிவிக்காமலே என்னைக் குற்றம் சாட்டிவிட்டது; எனக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கின்றது. தேவர்களுடைய மனப்புனிதமே வந்து உதவினுலுங்கூடத் தமது கொடிய நிருபணங்களிலிருந்து மீறிட முடியாதென் றெனக்கு நன்றாய்த் தெரியும். ஆகையாற்றான் இதோ நானே எதிர்த்துப் பாய்ந்து உங்களது அற்பத் தளைகளைப்பெயர்த்து முதற்படி நானே எடுக்கவும் போகின்றேன். இதுவரையிலும் நான் ராஜத்ரோகியாயிருந்ததில்லை. ஆனல் இவ்விரு நிருபங்களும் என் கைவசமகப்பட்டது முதல் நான் உங்களது நாசத்திற்கு வழிதேடிக்கொண்டே யிருக்கிறேன். இன்றிரவு என்னுலியலக்கூடிய அதிகோரமும் நாசத்திற்கேதுவுமான விபத்தைச் சாற்றப் போகின்றேன். வஞ்சத்தையே தர்மமாக உயர்த்திடுவதும், இப் பிரபஞ்சத்தையே ஏமாற்றத்தாலும், ஜாலத்தாலும், பொய்களாலும், நன்றியின்மையாலும், போக்கிரித்தனத்தாலும் பறிக்க முயலுவதுமான ஒரே நகரத்தை இழிவுபடுத்திய செய்கையை எனது ஜீவிதத்தின் உத்தமோத்தம கிருத்யமாகவும் கருதப்போகின்றேன். ஏனெனில் உங்களது அதர்மம் உலகமனைத்திலும் பரவிவிடாமற் றடைசெய்து வருவதும், தன் மதில்களுள்ள நாள் வரையிலும் தடைசெய்யப் போவதுமான உங்கள் பழைய சத்ருவாகிய மதுராபுரி இன்றிரவு தானே என் மூலம் காக்கப்பட்டு, மறுபடியுமோர் தடவை தலையுயர்த்தித் தனது வீராவேசத்தைப் புலப்படுத்தப் போகின்றது. ஆ, எழுந்திருக்க வேண்டாம், வீண்வீரங்களுங் காட்ட வேண்டாம். எனக்கு வேண்டிய உபாயங்களனைத்தையும் நான் ஒழுங்குபடுத்தியாய்விட்டது. அவைகளை இனித் தவிர்க்கவும் முடியாது; தாமும் என்னுதீனத்திலாய்விட்டீர். நானின்றும்மைப் பிடித்துக்கொண்டிருப்பதால் சிங்களத்தின் பாவ்யத்தையே பிடித்துக்கொண்டிருப்பதாகத் தோன்றுகின்றது.

(த்ரைவல்க்யன் தன் கைக் குந்தத்தை உருவிப் பிரபஞ்சபாலனை நோக்கித் திடீரென்று குத்துகிறான்.)

(தொடரும்.)



# மநு தர்ம சாத்திரம்.

(சா. ஞானபண்டிதன் எழுதியது.)

அலைகடல் சூழ்ந்த இந்நிலவுலகில் வாழும் சீவர்களுள் மக்கட்பிறவியே சிறப்புடைத்தென்று பெரியோர் கூறியுள்ளார். அத்தகைய சிறப்புடையதான பிறவியை எய்திய மக்கள் உய்வடையும் வண்ணம் ஆன்றோர்களால் அறிவு நூல்களும் நீதி நூல்களும இயற்றப்பட்டிருக்கின்றன. அந்நூல்களுள் எமமதமும் சமமதமெனவும், எக்குலத்தவராயினும் பிறப்பினலன்றி அவரவர் குணம், ஒழுக்கம் முதலியவைபற்றி உயர்ந்தோர் தாழ்ந்தோரென்றும் கூறும் நூல்களே உயர்ந்தவைகள். அத்தகைய நூல்களையே அறிவாளிகள் பெரிதும் விரும்பிப்படிப்பார்கள். அன்றி பிறநாட்டவரும் தமது மொழியில் மொழிபெயர்க்க வெண்ணிப் பெரிதும் பயனுறுவார்கள். அவ்வாறின்றித் தம் சமூக முன்னேற்றம் ஒன்றையே பெரிதும் குறிக்கோளாகக்கொண்டு மற்ற சமூகத்தவரைத் தாழ்த்தித் தாமே உயர்ந்தவரென வெண்ணி இறுமாந்திருக்கும் ஒரு சாரரால் எழுதப்பட்டிருக்கும் நூல்கள் கேவலம் பிழைப்பொன்றையே கருதி வெளியிடப்பட்ட நூல்களாகக் கொள்ளப்படும். இத்தகைய ஒரு கூட்டத்தவராலேயே இதுகாலை எமது நாட்டில் யாண்டும் சுயமரியாதைக் கிளர்ச்சி ஏற்பட வேண்டியதவசியமாகி விட்டதென்பது யாம் சொல்லாமலே விளங்கும்.

மேற்குறித்த நூல்களுள் “மநுதர்ம சாத்திரம்” எனும் பெயரிய நூலும் ஒன்றென்பது எமது தாழ்மையான அபிப்பிராயம். எமது அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க மேற்கண்ட நூலின் தமிழ் மொழிபெயர்ப்பை முற்றிலும் படித்துப் பார்த்தேன். யாண்டும் பிராமணர்களே உயர்ந்தவர்களென்றும், மற்ற குலத்தவர்கள் இழிந்தவர்களென்றும், பிராமணருக்கு ஒரு நீதியாகவும், மற்றவருக்கு ஒரு நீதியாகவும்கூறியிருப்பவையே காணப்படுகின்றன. குறிப்பிட்ட ஒரு சமூகத்தினரின் முன்னேற்றத்தை யாம் தடைசெய்யவில்லை. அவ்வாறு செய்யவும் அறிவாளிகள் விரும்ப மாட்டார்கள். எனினும் பிறசமூகத்தவரே ஒருசமூகத்தவரை என்றும்அடிமையாக்கி ஆண்டு வருவதைக் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருக்கச் சுயமரியாதையுள்ள எவரும் விரும்ப மாட்டாரென்பது திண்ணம்.

மேற்கண்ட நூலில் பிராமணர்களின் உயர்வைக் கூறும் பாகங்களை விலக்கி, பிராமணரல்லாதாரின் முன்னேற்றத்தைப் பெரிதும் பாழ்படுத்தும் சிற்சில சுலோகங்களை எடுத்துக்காட்டிப் பதிலுங் கூறுவாம்.

(1) “சூத்திரன் வலிமையால் மற்ற மூன்று வருணத்தார் மனைவியைப் புணர்ந்தால் அவனை உயிர் போகிற வரையில் தண்டிக்க. ஆனல் நான்கு வருணத்தாருக்கும், பொருள், புத்திரன் இவர்களை விட மனைவியை விபசார தோஷமின்றி காப்பாற்றுவதே மேலான தருமம்.”

(8-வது அ. 359. சு.)

(1) பதில்—வலிமையால் பிறன் மனைவியையும் எவராயினும் குறித்த தண்டத்துக்குரியவர்களெனக் கூறுதல் பொருந்தும். அவ்வாறின்றிக் குறிப்பிட்ட ஒரு சமூகத்தவர் என்னும் கூற்று சுயநலமியான பிராமணர் ஒருவராலேயே கட்டிவிடப் பட்டிருக்கிறதென்பது நாம் சொல்லாமலே விளங்கும். ‘பிறனில் விழையாமை’ எனும் தலைப்பில் “அறன்கடை நின்றாரெல்லாம், பிறன்கடை நின்றாரிற் பேதையாரில” எனும் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரின் திருக்குறளைக் கண்டு நோக்குக.

“பிராமணனுடைய சுவர்னத்தை திருடினவனுக்கு பின்பு அறிவு வந்தால் தலைமயிரை யவிழ்த்துக்கொண்டு தான் செய்த குற்றத்தைச்சொல்லி தன்னைத் தண்டிக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு அரசனிடத்திற்கு ஓடவேண்டியது.”

(ஷை அ. 314. சு)

“அரசனவனை மரிக்கும்படி தண்டித்தாலும் உயிருடன் விட்டுவிட்டாலுந் திருடன் பாபம் போய்விடும். தண்டியாமலே விட்டு விட்டால் திருடன் பாபம் அவனைச்சாரும்.”

(ஷை அ. 316 சு)

பதில்—குற்றஞ் செய்பவர் எவராயினும், எச்சமூகத்தவராயினும் அரசன் தண்டித்தல் பொதுவான தர்மம். அவ்வாறு தாம் செய்த குற்றத்தை ஒப்புக்கொள்ளவேண்டியது நீதி. குறிப்பிட்ட ஒரு சமூகத்தவர் சுவர்னத்தை பிற சமூகத்திலுள்ள ஒருவன் திருடிய குற்றத்துக்கு விதிக்கப்பட்ட தண்டம் ஏன் அவ்வாறே பிராம்மணர்களுக்கும பொருந்தாது? திருடரிலும் உயர்ந்தவர் தாழ்ந்தவருண்டோ? என்னே இவர்களின் பிரித்தாளும் தந்திரம். இதனின்றுமே இந்நூலின் யோக்கியதையை அறிந்துகொள்ளலாம். ‘நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே’ யென அஞ்சாது வீரத்துடன் மொழிந்த நற்கீரர் முதலிய புலவர்கள் வாழ்ந்த இவ்வருந் தமிழ் நாட்டில் நீதியிலும் உயர்வு தாழ்வு கற்பிக்கக் கிளம்பிய ஒரு கூட்டத்தவரின் செயல் தான் என்னே?

“இந்த மஹாபாதகங்களை குணமுள்ள பிராமணன் தெரியாமற் செய்தால் அவன் பிராயச்சித்தஞ் செய்துகொண்ட பிறகு அவனுக்கு அரசன் ஐந்நூறு பணம் தண்டம் விதிக்க. அறிந்து செய்தால் தேசத்தினின்றும் அவன் பொருளோடு துரத்துக.”

(9-வது அ. 241 சு.)

“பிராமணன் நீங்கலாக குணமுள்ள மற்ற மூன்று வருணத்தாரும் மஹாபாதகங்களை அறியாமற் செய்தால் அவர்களது எல்லாப் பொருளின் கவர்ச்சியை தண்டமாக விதிக்க. அறிந்து செய்தால் எல்லாப் பொருளையும் கவர்ந்து ஊரைவிட்டுத் துரத்துக. சிலர் அறிந்துசெய்தற்கு கொலை தண்டமென்று சொல்லுகிறார்கள்.

(ஷை அ. உசஉ. சு)

பதில்:—பிராமணராயினும் மற்றெக் குலத்தவராயினும மஹாபாதகங்களைச் செய்யின் பொதுவான தண்டத்துக்குட்படுதல் நீதி. அவ்வாறின்றி பிராமணன் குற்றமிழைத்தால் அவனைப் பொருளோடு ஊரைவிட்டுத் துரத்துவதும் அல்லாதவன் ஒருவன் அதே குற்றமிழைப்பின அவர்களுடைய பொருளைப பறித்துக்கொண்டு ஊரைவிட்டுத் துறத்துவதும் பெரும் அநீதி. இதினின்றுமே ‘பார்ப்பனர் சூழ்ச்சி’ வியக்தமாகின்றது. அதற்குமேல் அன்பர்கள் யூகித்துக் கொள்வார்களாக.

நாம் மேற்கூறியவை ‘மனுதர்ம சாஸ்திரம்’ எனும பெயரிய நூலின் ஒரு சிறு பகுதியேயன்றி அதிலுள்ள ஏனைய ஆபாசங்களை எடுத்தெழுத எமது மனம ஒருப்படாமையால் இத்துடன் அமைந்தோம். அன்பர்கள் அந்நூலை வாசித்துத் தெளிந்துகொள்வார்களாக. ஆரம்ப முதல் முடிவுவரையில் பிராமணர்களை உயர்த்தியும பிராமணரல்லாதவரைத் தாழ்த்தியுமே எழுதப்பட்டு வந்திருக்கிறது. ஆனல் ‘மனு’ வென்னும் பெரியார் இந்நூலை எழுதியிருப்பாரென்றுவது, அவ்வாறியற்றியிருப்பினும் இவ்வளவு ஆபாசங்களுடன் இயற்றியிருப்பாரென்றுவது நாம கருதமுடியவில்லை. ஆங்காங்கு சுயநலமிகளான சில பிராமணர்களால் இடைச்செருகல் மிகுதியும் ஏற்பட்டுள்ளன. இந்நாள் சுயமரியாதையுள்ள பிராமணரல்லாத அன்பர்கள் ஒரு முகமாக எதிர்த்துப் பெருங்கிளர்ச்சி செய்தல் வேண்டுமெனபது எமது பெரும் விருப்பம.

எமது தனவைசிய அன்பர்களுக்கு ஒரு சிறு வேண்டுகோள். கேவலம் வயிற்றுப் பிழைப்பொன்றைக் கருதிய பிராமணர்களே நமது நாட்டில மிகுதியும் வசிக்கின்றார்கள்; அல்லது நம்மை நாடியே வருகின்றார்கள். அவர்களிடம் “இனியும் உங்கள் போலிச் சாத்திரம பலிக்கா”தென்று கண்டிப்பாகச் சொல்லிவிடுங்கள். நன்மை தின்மை விசேடங்களில் (பொருளில்லாமல்) பூரிக்காடுப்பதை நிறுத்திவிடுங்கள. ‘சுயமரியாதை’ என்பதை அறியாத பிராமணர்களைக் கையெடுத்து வணங்காதீர்கள். உண்மையுணர்ந்து பிராமணரல்லாதார் பெருமையை நிலைநாட்ட முனைவாருங்கள்.

# பர்மா தனவணிகர் மகா நாடு.

(காரியதரிசி தந்திமூலம் அறிவிக்கிறார்.)

இரங்கூன் ஆவணி-மீ உஎஉ.

நாளிது ஆவணித்திங்கள் உகூ-ம் நாள் ஞாயிறன்று மாலை பர்மா நாட்டுக்கோட்டைச்செட்டியார்கள் சங்கத்தின் நான்காவது வருஷக் கொண்டாட்டம் இரங்கூன் மொகல்வீதி எம்-நிர். இலக்கமுள்ள சங்கக் கட்டிடத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது.

## தலைவர் தேர்தல்.

திருவாளர் சா. அ சு. ராமன் செட்டியாரவர்கள் திரு. அ. க. அ. சித. வெ. சொக்கலிங்கம் செட்டியாரவர்களைத் தலைமை வகிக்கும்படி பிரேரேபித்து இனிமையான சிறு சொற்பொழிவொன்று நிகழ்த்தினர்கள். அத்தீர்மானத்தைத் திருவாளர் பி. எல். பி. எம. சாத்தப்ப செட்டியார் ஆமோதிக்க, பெருத்த கரகோஷத்தினிடையே தலைவர் தனது ஆசனத்தி லமர்ந்தார். திருவாளர் சு. தெ. ப. சி. ராம. முருகப்ப செட்டியாரவர்கள் தலைவருக்கும் சங்கமாஜித் தலைவருக்கும் பூமாலைகள் சூட்டினர்கள். பின்னர் தனவணிக இளைஞர் தமிழ்ச் சங்கத்தார் இன்னிசைக கருவிகளுடன் வாழ்த்துப் பாக்கள் பாடினர்.

## காரியதரிசி அறிக்கை.

பிறகு அவைத் தலைவரவர்கள் சங்கத்தின் சென்ற ஆண்டுத்தலைவர், உப தலைவர், காரியதரிசி, பொக்கிஷதார் ஆதியநிர்வாகஉத்தியோகஸ்தர்களுக்கு பூமாலைகள் சூட்டுமாறு காரியதரிசியைக் கேட்டுக்கொள்ள அவ்வாறே பெருத்த கரகோஷத்தினிடையே செய்யப்பெற்றது. பின்னர் மாஜி காரியதரிசி சென்றவருட அறிக்கையைப் படிக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டார். காரியதரிசி தனது அறிக்கையைப் படிக்கையில் சபையிலிருந்தோர் அனைவரும் கவனமாகச் செவிமடுத்துக் கொண்டிருந்தனர். வருமானவரி, பர்மியக் குடியானவர்கள் மசோதா, இம்பீரியல் பாங்கி, விவசாயக் கமிஷன் முதலியன சம்பந்தமாக கஉஉ-உஎ-ல் நடந்த கூட்டங்களைப் பற்றியும், சங்கத்தாரால் பிரஸ்தாப வருஷத்தில் வெளியிடப் பெற்றிருக்கும் துண்டுப் பிரசுரங்களைப்பற்றியும, ஸ்டாம்புச்சட்டம், செக்குகள், உண்டியல்கள், அடவுகடை, சங்கத்தாரது பிரசாரம், பஞ்சாயத்துமுறை, கப்பல் பிரயாணிகளின் வசதிகள், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகாநாடு, சங்கத்தைச் சார்ந்த இலவச புத்தகசாலை, வாசகசாலை நான்காம் ஆண்டுத் தணிக்கை செய்யப்பட்ட வரவு செலவு கணக்கு முதலியன குறிப்பிடப்பட்டிருந்தன. அறிக்கை தமிழில் புத்தகவடிவமாக அச்சியற்றப் பெற்றிருந்தது. அவ்வறிக்கை எல்லோருக்கும வழங்கப்பெற்றது.

## ஸ்வாமி அற்புதானந்தா.

தலைவரவர்கள் பிறகு ஸ்வாமி அற்புதானந்தா அவர்களைச் சங்கத்தால் ஏற்படும் பயன்களைப்பற்றிப் பேசுமாறு கேட்டுக்கொண்டார்கள். ஸ்வாமிகள் பொதுவாக சங்கங்களின் உற்பத்தியைப்பற்றித் தக்கமேற்கோள்களுடன் பேசிவிட்டுக் கடந்த நான்கு ஆண்டுகளில் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம் செய்துள்ள அரிய பெரிய வேலைகளைப்பற்றிப் பெரிதும் விரந்து கூறினர். பர்மா நாட்டுக்கோட்டையார்கள் பர்மா சர்வ கலாசாலைக்கு நன்கொடையளித்ததை முன்னிட்டுப் புகழ்ந்து பேசினர். பிறகு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் தங்களது இளைஞர்களை, சர்வகலாசாலையால் வருங்காலத்தில் கிடைக்க விருக்கும் மட்டற்ற நலன்களைப் பெறுமாறு செய்யவேண்டுமென்று குறிப்பிட்டார்.

## புதிய காரியதரிசி.

இதன் பின்னர் மாஜி காரியதரிசி புதிய காரியதரிசியான திருவாளர் சா. அ. சு. ராமன் செட்டியாரவர்களை அவையோருக்கு அறிமுகம் செய்து வைக்கு முகத்தான சிறந்து பேசினர்.

## திரு ஸ்வாமிநாதன் செட்டியார்.

சித்குவின் திருவாளர் அ. வீர. அ ஸ்வாமிநாதன் செட்டியாரவர்கள் சங்கத்தால் விளையும் அபரிமிதமான பயன்களைப்பற்றியும், பர்மாவிலுள்ள தனவணிக சமூகத்தார் இரங்கூனிலுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தால் அடைந்துள்ள பல நன்மைகளைப் பற்றியும் குறிப்பிட்டு விட்டு அங்கத்தவர்களது சந்தாப் பணம் அதிகம் பாக்கியிருக்கும் பட்டியலைப படித்து விட்டுஅவ்வித நிலை ஏற்பட்டிருப்பதற்காகப் பெரிதும் வருந்தினர். அங்கத்தவர்கள் சங்க விஷயங்களில் அதிக ஊக்கங்காட்டி வர வேண்டுமென அவர்களைப் பெரிதும் வேண்டிக்கொண்டதோடு வருமான வரி, பர்மா குடியானவர்கள் மசோதா, விவசாய கமிஷன் முதலியனவற்றில் சங்கம எவ்வளவு பாடுபட்டிருக்கிற தென்பதை நன்கு விளக்கிக் கூறினர்.

## இளைஞன் ஆவடையப்பன்.

சுமார் பத்து வயதுள்ள ஆவடையப்பன் எனும் சிறுவன் பிறகு மனித வாழ்க்கையைப் பற்றியும், சுத்த போஜனத்தின் அவசியம், மதுவிலக்கு, சிக்கனம், கல்வி முதலிய விஷயங்களைப் பற்றியும் தெளிவாகச் சபையோர் மெச்சுமாறு பேசினன்.

## தலைவர் முடிப்புரை.

பின்னர் தலைவரவர்கள் பிரசங்கங்களைத் தொகுத்துக் கூறிச் சில உரைகள வழங்கிவிட்டுச சங்கத்தின் மாஜி உத்தியோகஸ்தர்கள் செய்துள்ள அரிய வேலையைப் பாராட்டிப் பேசினர். நாட்டுப் புறங்களிலுள்ள அங்கத்தவர்கள் வாராமைக்கு வருந்தினர்.

பிறகு காரியதரிசியவர்கள் தலைவரவர்கட்கும், சொற்பொழிவாளர்கட்கும், தொண்டர்களுக்கும வந்தனங்கூற கூட்டம் மாலை கூ—௨௦ மணிக்கு இனிது நிறைவேறியது.

தனவைசிய இளைஞர் சங்கத்தொண்டர்கள் சுறுசுறுப்பாகவும் திறமையாகவும் வேலை செய்தது குறிப்பிடத்தக்கது.

அன்பர்களே!
உங்கள் வீட்டில் யாவரும் கதருடுத்துகிறீர்களா?
இல்லையேல், இன்றே கதராடை புனைந்து பெருவாழ்வு பெறுங்கள்.





# நீலன் சரிதம்.

ஜெனரல் நீலனைப்பற்றி தமிழ்நாடு இளைஞர் படையைச் சேர்ந்த ஸ்ரீமதி பத்மாசினி அம்மாள் தமிழ்நாடு பத்திரிகைக்குப் பின் வருமாறு எழுதுகின்றார்:—

1857-ம் வருஷம் ஜூன் மாதம் 4ந்தேதி நடைபெற்ற காசிக் கிளர்ச்சிக்குப் பின், ஜெனரல்நீல் பக்கத்துக்கிராமங்களில் அமைதியைப் பாது காக்கவென்று ஆங்கிலேயரையும், சீக்கியரையும் சிறு சிறு கூட்டங்களாகப் பிரித்து ஒவ்வொரு இடத்திற்கும் அனுப்பிவைத்தார். பாதுகாக்க கிராமங்களுக்கு இக்கூட்டத்தார் செல்வது வழக்கம். தங்கள் முன் எதிர்பட்டவரை யெல்லாம் வெட்டியோ, தூக்கிலிட்டோ எமனுலகிற்கு அனுப்பினர். தூக்கில்போட கணக்கற்ற ஜனங்கள் இருந்தமையால் ஒரு தூக்கு மரம் இடைவிடாது வேலைசெய்தும் போதவில்லை. ஆகவே வரிசை வரிசையாகத் தூக்குமரங்கள் ஏற்படுத்தப்பட்டன. உயிர்போனதும் போகாததுமாக ஜனங்களை வீசி எறிந்தும் வேலை முடியவில்லை. இன்னும் தூக்கில் போடுவதற்குக் கூட்டம் கூட்டமாய் ஜனங்கள் பாக்கி யிருந்தனர். மரங்களை வெட்டித் தூக்கு மரங்களமைத்த அதிகாரிகளுக்குச் சலிப்பு வந்து விட்டது. ஆகவே மரங்களிலேயே மனிதர்களைக் கட்டித் தொங்கவிடவாரம்பித்தனர். ஒரு மரத்தின் ஒரு கிளையில் ஒரு மனிதனைத் தொங்கவிட்டால் போதுமா? பகவான் ஒரு மரத்திற்கு அனேக கிளைகளை உண்டாக்கி யிருக்கவில்லையா? ஆகவே மரங்களின் ஒவ்வொரு கிளையிலும் மனிதர்கள் கழுத்தில் கயிறுடன் தொங்கவிடப்பட்டனர். இந்த ராணுவக் கடமையும், கிறிஸ்துவக் கொள்கையும் இரவு பகல் விடாது நிறைவேற்றப்பட்டதால், அலுப்பு ஏற்பட்டு இந்த சம்பந்தமான கௌரவ கைங்கரியத்தில் கொஞ்சம் வேடிக்கையும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. முரட்டுத்தனமாய்க் குடியானவர்களை இழுத்து வந்து தொங்கவிடுவதை நாகரிகமுடையதாய் மாற்றிக்கொண்டனர். ஜனங்களை யானைகளின் மீதேற்றி யானைகளைப் பெரிய கிளைகளின் கீழேகொண்டு வந்து நிறுத்துவார்கள். பிறகு ஜனங்களை கழுத்துகளில் சுருக்குப்போட்டு, மரக்கிளைகளில் பலமாய்க் கட்டிவிட்டு யானைகளை அப்புறப் படுத்தி விடுவார்கள். வரிசை வரிசையாய் உருக்குலைந்த தேகங்கள் தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்து ஆங்கில வழிப்போக்கருக்கு அருவருத்துப் போயிற்று. எனவே சுதேசிகளை வரிசையாகத் தொங்க விடாமல் விதம் விதமான சித்திரங்கள் போல் தொங்கவிட ஆங்கில அதிகாரிகள் ஆரம்பித்தனர். சிலர் '8' என்னும் எண்ணைப்போலவும், சிலர் '9' என்பதைப் போலவும் தொங்கவிடப்பட்டனர்.

('கேயியும், மாலிஸனும்,' எழுதிய இந்திய சிப்பாய்க் கலகம் பாகம் 2 பக்கம் 177)

இவ்வாறு பலவிதமாக முயற்சித்து வேலை செய்தும் இன்னும் 100 ஆயிரக்கணக்காக கறுப்பு மனிதர்கள் உயிருடன் இருந்தனர். இவ்வளவு பேரையும் தூக்கில்போடக் கயிறும் அதிமாக வேண்டும். சீக்கிரத்திலும் முடியாது. நாகரிகமுள்ள கிறிஸ்துவராகிய ஆங்கிலேயருக்கு நினைத்திருக்காத கஷ்டம் ஏற்பட்டது. ஆனால் கடவுளின் கிருபையால் ஒரு புதுவழி அவர்களுக்குத் தோன்றியது. முதல் தடவையாக இந்த ஏற்பாட்டை நடத்திப் பார்த்ததில், மிகத் திருப்திகரமாயிருந்தபடியால் தூக்கில் போடுவது நிறுத்தப்பட்டு புதிய முறை அனுஷ்டானத்திற்குக்கொண்டு வரப்பட்டது. இவ்வாறு ஒவ்வொரு கிராமமாய் அழிக்கப்பட்டது. கிராமங்களை நெருப்புச் சூழும்படி செய்து கிராம வாசிகளைப் பயப்படுத்த யந்திர பீரங்கிகளை ஊரைச் சுற்றி வைத்துவிட்டால் ஆயிரக்கணக்கான சுதேசிகள் சாக எவ்வளவு காலமாகும்? இவ்வாறு கிராமங்களைச் சுற்றி நெருப்புவைத்து ஜனங்களை உயிருடன் எரிப்பது ஆங்கிலேயருக்கு மிக விநோதமாயிருந்தமையால், இந்தக் காட்சிகளைப்பற்றி விரிவாக இங்கிலாந்துக்கு இவர்கள் அனேக கடிதங்கள் எழுதினர். வெகு விரைவாகவும் சாமர்த்தியமாகவும் நெருப்பு வைக்கப்பட்டதால் ஒருவரும் தப்பியோட மார்க்கமில்லை. ஏழை விவசாயிகள், படித்த பிராமணர்கள், சாதுக்களான முகமதியர்கள், பள்ளிக்கூடச் சிறுவர்கள், குழந்தைகளை சீராட்டிக்கொண்டிருக்கும் தாய்மார்கள், சிறுபெண்கள், குருடு, நொண்டி, வயோதிகர் யாவரும் தீக்கிரையாயினர். கிழவர்களும், ஸ்திரீகளும் ஒரு அடி கூட முன் பின் செல்ல வழியின்றித் தாங்கள் படுத்த படுக்கையிலேயே எரிந்து சாம்பராயினர். தனி மனிதன் தப்பித்து வந்து விட்டால் ஆங்கிலர் என்ன செய்தனர்? இங்கிலீஷான் ஒருவன் தன் கடிதத்தில் சொல்லியிருப்பதாவது:—

ஜனநெருக்கம் மிகுதியாகவுள்ள ஒரு பெரியகிராமத்துக்கு நாங்கள்நெருப்புவைத்தோம். யாராவது நெருப்பைத் தாண்டித் தப்பி வந்து விட்டால் அவனை அவ்விடத்திலேயே நாங்கள் சுட்டுத் தள்ளி விடுவோம்.

('சார்லஸ் பாலின்' இந்தியக் கலகம் பாகம் 1 பக்கம் 243,244)

தயாளமும், தைரியமும் உள்ள பிரிட்டானியன் ஒருவன் அலஹாபாத்தில் தான் செய்த வீரச்செயல்களைக் குறித்து எழுதிய கடிதத்தின் சுருக்கத்தைக்கீழே குறிப்பிடுவோம். "ஒரு பிரயாணத்திலே நான் மிக உற்சாகங்கொண்டேன். நாங்கள் பீரங்கியுடன் ஒரு நீராவிக்கப்பலில் ஏறிக்கொண்டோம். சீக்கியரும், ஆயுதப்படையாரும் நகரத்திற்குள் தரை மார்க்கமாய்ப் புகுந்து தாக்கினர். குழப்பமுள்ள விடங்களுக்கு வந்து சேரும் வரையில் இடப்பக்கத்திலும், வலப்பக்கத்திலும் நாங்கள் இடைவிடாது குண்டுகளைச் சொரிந்துகொண்டே சென்றோம். பிறகு கரையிலிறங்கி எங்கள் பீரங்கிகளால் எல்லாப் பக்கங்களிலும் நெருப்பைச் சொரிய வாரம்பித்தோம். என்னுடைய பழைய இரட்டைக்குழல் துப்பாக்கி கணக்கற்ற பிச்சைக்காரரை வீழ்த்தியது. பழிவாங்கும் தாகம் எனக்கவ்வளவிருந்தது. நாங்கள் இடது வலது பக்கங்களில் சொரிந்த குண்டு மழையால் பிடித்த நெருப்பு வானையளாவியது. காற்றும் அதனுடன் சேர்ந்துகொண்டு, மோசக்கார துரோகிகள் இப்படித்தான் பழிவாங்கப் படுவார்களென்பதை நன்ருய் விளக்கியது. அதிருப்தி கொண்ட கிராமங்களை யழிக்க ஒவ்வொரு நாளும் நாங்கள் பிரயாணம் செய்தோம். நாங்கள் நன்ருய் வஞ்சம் தீர்த்து விட்டோம். அரசாங்கத்திற்கும் அதைச் சேர்ந்தவர்களுக்கும், விரோதமாய்க் குற்றம் செய்த சுதேசிகளை விசாரிக்கும் நியாய சபையின் தலைவனாய் நான் நியமிக்கப்பட்டேன். ஒவ்வொரு நாளும் எட்டு அல்லது பத்துப்பேரை நாங்கள் கொலை செய்தோம். உயிர்த்தானம் எங்கள் அதிகாரத்திலிருந்தது. அதை நான் கொஞ்சமும் செலவழிக்கவில்லையென்று நீங்கள் நிச்சயமாய் நம்பலாம். விசாரணை யென்பதெல்லாம் சில விநாடி நேரந்தான். தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளி கழுத்தைச் சுற்றிக் கயிறு மாட்டப்பட்டு ஒரு வண்டியின் மீதேற்றி மரத்தடியில் நிறுத்தப்படுவான். பிறகு கயிற்றின் மறு முனையைக் கிளையில் மாட்டி வண்டியைத் தள்ளிவிட்ட பிறகு அவன் ஊசலாடுவான்."

("சார்லஸ் பாலின்" இந்தியக் கலகம் பாகம் 1—பக்கம் 257.)

நீலே இதைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறனென்பதைப் பார்ப்போம். 'நான் நியாயமாய்த்தான் நடந்தேனென்பதை பகவான் தான் சொல்லவேண்டும். நான் மிகக் கடுமையாய்த்தான் நடந்துகொண்டேன் ஆனால் இச்சந்தர்ப்பங்களில் இவ்வாறு செய்ய வேண்டி வந்ததினால் நான் பகவானால் மன்னிக்கப்பட வேண்டுமென்று நம்புகிறேன். எல்லாவற்றையும் என் தேச நன்மைக்காகவே செய்தேன். என் தேச கௌரவத்தையும், அதிகாரத்தையும் ஸ்தாபிக்கவே நான் பாடுபட்டேன்!' இங்கிலாந்து தேசாபிமானக் கொள்கை இணையற்றதாகவே யிருக்கிறது.

இன்னொரு சரித்திராசிரியனுகிய 'ஹோம்ஸ்' சொல்லி யிருப்பதாவது:—"வயோதிகர் நமக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. குழந்தைகளுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்த நிரபராதிகளான தாய்மார்கள் நமது பழி வாங்குவதனுல் பட்ட கஷ்டத்தை கொடுங் கொலையாளிகளைப் போலவே அனுபவித்தனர். ஆனால் நீலின் கௌரவத்திற்காக நாம் இதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தக் கொடுந் தண்டனைகளை சந்தோஷத்துடனல்ல, அவனுக்கேற்பட்ட பயங்கரக் கடமையினாலேயே விதிக்க வேண்டி வந்தது.

'ஹோம்ஸ்' ஒப்பாய் சண்டை 229-230.

# நாட்டு நடப்பு.

மகாத்மாஜி நம் தமிழ் மாகாணத்துக்கு வந்துவிட்டார். இம் மாகாணத்துக்கு சென்னை தலை நகரல்லவா? எனவே அங்கு நாலைந்து தினங்கள் தங்கினர். மேலும் தலைவர்களெனப்படுவோர் பலர் அங்கிருக்கின்றனரல்லவா?

ஃ ஃ

மகாத்மா வந்துவிட்டாரென்றால் கேட்பானேன். எங்கும் உற்சாகம். எங்கும் பொதுக்கூட்டம். எங்கும் பணப்பை. எங்கும் அவரை அழைக்கின்றனர். அவர் என்ன செய்வார் பாவம். இரவும் பகலும் ஒன்ருக விருந்ததில்லையே என்று அவர் நினைக்கிருராம. ஏன்? இரவும் பகலாக இருந்தால தரித்திர நாராயணனுக்கு இன்னும் அதிக வேலை செய்யலாமே என்பதுதான் அவரது கவலை.

ஃ ஃ

ஆனால் சில சோம்பேறிகளும் இரவும் பகலும் ஒன்றுயிருந்ததில்லையே என்று தான் கவலை கொள்ளுகின்றனர். இவர்களது கவலைக்குக் காரணமென்ன தெரியுமா? பகலும் இரவாயிருந்தால் தூங்கிக்கொண்டிருக்கலாமே என்பது தான்.

ஃ ஃ

சென்னைப் பச்சையப்பன் கலாசாலையில் பஞ்சமர்கள் என்போரைச் சேர்த்துக் கொள்ளலாகாதென, பச்சையப்பன் தாம கர்த்தர்கள் சிறிது காலத்திற்கு முன் தீர்மானித்தார்களலலவா! அக் கமிட்டியார் அக் கலாசாலைக்குள் பஞ்சமர்களின் ஆருயிர் சகோதரரான மகாத்மாவை வரவேற்று உபசரிக்க எவ்வாறு அனுமதி கொடுத்தனர் என்பது தெரியவில்லை. அவர் பேசிக்கும் ஒருவன் கூடாமதனில் அவர் மட்டிலும பரவாயில்லையோ! மகாத்மாவிற்கும முன்னர் அக்கலாசாலைக் கமிட்டியார் தீர்மானித்திருப்பது தெரியாதுபோலும்! தெரிந்தால போயிருக்க மாட்டார் என்பது உறுதி. அதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது தெரிந்துவிட்டதாம. அதுபற்றி புத்திமதி சொன்னராம.

ஃ ஃ

ஓர் தினம் சென்னையில் குறிப்பிட்ட அன்பர்கள் முன்னிலையில் மதுவிலக்கைப் பற்றிப் பேசினர். பூரண மதுவிலக்கு முறையை உடனே கையாள வேண்டுமென்பது அவரது பேரவா! சிலர் மதுவிலக்கு முறையை படிப்படியாகத் தான் அனுஷ்டிக்க வேண்டும என்று சொல்லுவது எல்லோருக்கும் தெரியாதா? அப்பல்லவிக்கு அக்கூட்டத்தில் காந்திஜி கன்னத்தில் 'பளீர்' என்று அடித்ததுபோல் பதில் கூறினர். 'மதுவிலக்கு விஷயத்தில் மெதுவாக எப்படிச் செலவமுடியும்? ஓர் குடிகாரனது மனைவியினிடம் அவ்வாறு (மெதுவாகத்தான் மதுவிலக்கு முயற்சிசெய்ய வேண்டுமெ) சொல்ல முடியாது' என்று தெரிவித்தார்.

ஃ ஃ

இப்படிக் கூறுகையில் தனது அனுபவம் ஒன்றைத் தெரிவித்தார். அவர் ௧௮௯௯-ம வருஷத்தில் பிரிட்டோரியா நகரத்தில் ஓர் குடும்பத்தில வசித்து வந்தாராம. அவ்வீட்டுக்காரர் பெருங்குடிகாராராம. சீசாக்களைத் திறந்து சாப்பிடுவது என்ற வழக்கம் அவரிடம் கிடையாதுபோல் தோன்றுகிறது. அவரது மனைவியே குடும்பச் செலவுக்கு வேண்டியவற்றைக் கவனித்து வருவாளாம். தனது கணவன் வீட்டுக்கு வந்தும என்ன நேருமோ என ஒவ்வொரு கணமும நடுநடுங்கிக் கொண்டிருப்பாளாம். 'மதுவிலக்கு விஷயத்தில மெதுவாகத தான முயற்சி செய்யவேண்டும என்று நான அம்மாதுனிடம கூறியிருந்தால், நான் அவ் வீட்டில் வசிக்கச் சம்மதித்திருப்பாளா?" என்று காந்திஜி கேட்கிருர். ஒருகாலும சம்மதித்திருக்கமாட்டாள. உடனே வெளியில் துரத்தியிருப்பாள்.

சில வருஷங்களுக்கு முன் திருநெல்வேலியில் சென்னை மாகாண மகாநாடு எஸ். ஸ்ரீனிவாஸ அய்யங்கார் தலைமையில் நடைபெற்றது. அப்பொழுது தான் ஐயங்கார் அட்வகேட் ஜெனரல் பதவியினின்றும் விலகி அரசியல் உலகத்திற்கு வந்திருந்தார். எனவே அதிதீவிர வாதியாக அப்பொழுது விளங்கினர். இல்லாவிட்டால் அப்பொழுது செல்வாக்குப் பெறமுடியாதல்லவா? அம்மகா நாட்டில்தான் ஒத்துழையா இயக்கத்திற்கு விதைவிதைக்கப் பட்டது.

ஃ ஃ

அம் மகாநாட்டில் ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேற விட்டு விடக்கூடாதென்று இந்த மாகாணத்திலுள்ள மிதவாதிகள் ஏராளமாக வந்துகூடி தங்களால்இயன்ற மட்டிலும் தொண்டைகிழியப் பேசிப் பார்த்தனர். பலிக்கவில்லை. மிதவாத கோஷ்டியைச் சேர்ந்த ஓர் அம்மையார் பேசும்பொழுது "யாவற்றிலும் நாம் மிதமாகத்தான் செல்லவேண்டும். ஒரேபடியாகக் குதித்துவிடக் கூடாது" என்று குறிப்பிட்டார். ஒரு தேசியவாதி உடனே கிளம்பினர். "கற்பு விஷயத்தில் சற்றுமிதமாக நடந்து கொள்ளுகிறேன் என்று யாராவது கூறினால், ஏற்றுக்கொள்ளலாமா? அதைப்போல் தான் இதுவும்" என்று தெரிவித்தார். இப்பேச்சு இப்பொழுது ஞாபகத்திற்கு வருகின்றது. கற்பு விஷயத்தில் மிதமாக இருப்பது எங்ஙனம் சாத்தியமில்லையோ அதைப் போலவே தான் மதுவிலக்கு விஷயத்திலும் மிதமாக நடந்துகொள்வது சாத்தியமில்லை.

ஃ ஃ

பூரண மதுவிலக்கை அனுஷ்டிப்பதால் அரசாங்கத்தாருக்கு ஏற்படும கஷ்டங்களை நாம் உணரவேண்டுமெ என்று சொல்லப்படுகிறது. 'இவ் விஷயத்தில் அரசாங்கத்தாரது கஷ்டத்தை நாம் ஏன் உணரவேண்டு' மென்று காந்திஜி கேட்பது முறைதானே! மதுவிலக்கைக் கையாளாததனால் ஜனங்களுக்கு நேரும் மாபெருங் கஷ்டத்தை அரசாங்கத்தார் உணரவேண்டும் என்று ஏன் நாம் கூறக்கூடாது?

ஃ ஃ

மதுவிலக்கை அனுஷ்டித்து விட்டால் அரசாங்கத்தாரின் வருவாய் குறைந்து விடுமாம். கலால் வருமானத்தை—ஜனங்கள் தீய வழியில் பிரவேசிக்குமாறு தூண்டி அவர்களிடமிருந்து பெறும் வருமானத்தை—வருமானப் பட்டியலில் அரசாங்கத்தார் சேர்த்ததே தவறு என்பது காந்திஜியின் கருத்து. இது ஒன்றே ஜனங்களின் நன்மைக்காக ஆட்சி நடத்தப்பட்டு வரவில்லை என்பதை விளக்கப் போதாதா?

ஃ ஃ

இந்தியாவில் குடிகாரர்களின் தொகையை லட்சக்கணக்காக விருத்தி செய்து, அதனால் வரும் வருமானத்தைக் கொண்டு அவர்களது பிள்ளைகளுக்குக் கல்வி வழங்குவதைக் காட்டிலும் இந்திய மக்கள் கல்வி வாசனை அறியாதவர்களாக இருப்பது நலம் என்கிறார் காந்திஜி. குடிப் பழக்கம் வந்து கெட்டு மதியிழந்து போவதைக் காட்டிலும், கல்விபெறுது பொது அறிவையாவது வைத்துக்கொண்டிருக்கலாமல்லவா?

ஃ ஃ

'தூதிருஷ்டவசமாக நம்மையாண்டு வருபவர்கள் குடியை பஞ்சமா பாதகங்களுள் ஒன்ருக நினைப்பதில்லை. எனவே நமக்கு இவ்வளவு கஷ்டம் என்று மகாத்மா கூறுகிறார். இதற்கு நாம் என்ன செய்வது? இதற்கு மருந்து சுயராஜ்யம அடைவது தான். அதற்கு ஏற்ற வழிகளில் உழைக்க வேண்டும்.'

ஃ ஃ

'அபின் ஒருவனை மூட்டாளாக்குகின்றது. ஆனால் குடிவகைகளோ அறிவையழித்து மிருகமாக்கிவிடுகிறது' என்று காந்திஜி இரண்டுக்கும் வேற்றுமை கூறுகிறார். வட துருவத்திற்கு அருகாமையிலுள்ள நாடுகளில் தான் குடிவகைகள் இருப்பதற்குத் தகுதி என காந்திஜி அறிவிக்கிறார். குடிவகைகள் அங்கு செல்லுவதற்கு முன் பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கு செல்லவேண்டுமே! அதற்கு என்ன செய்வது?

(வளரும்)

## அயலகம்.

செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி ஏடனில் "கிரனேடியர்" என்ற கப்பல் திடீரெனத் தீப்பற்றி எரிந்ததால் மூன்று கப்பல் உத்தியோகஸ்தர்கள் தீக்கரையாயினர் எனத் தெரிகிறது.

ஃ ஃ

கெனியாவில் சிங்கத்தின் தொல்லை மிகவும் அதிகமாக இருப்பதால் ஐரோப்பிய வேட்டைக்காரரை நான்கு மாதங்களுக்கு நியமித்து அவர் மூலம் இத்தொல்லையை நிவர்த்திப்பதெனத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

நாளிது செப்டம்பர்மீ ச-ம் தேதி போர்ன் மத்திலிருந்து லண்டனுக்குப் போன தபால் பையைத் திருடர்கள் கைப்பற்றி அதிலிருந்த க0000 பவுன் நோட்டுகளைத் திருடிக்கொண்டு போய் விட்டார்களாம்.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் எ-ம் தேதி லண்டன் பிரிட்டிஷ் சங்கத்தின் கூட்டத்தில் சித்தவிருத்தி பிரிவில் டாக்டர் டி. டபிளியூ. மிட்சல் பேசுகையில் ஞானதிருஷ்டி முதலிய அதிசய சக்திகள் சாஸ்திரங்கள் மூலம் ஸ்தாபிக்கப் படக்கூடியவை என்று பேசினாராம்.

ஃ ஃ

ஆங்கிலோ இந்திய ஆகாயவசனி ஸர்வீஸ் செப்டம்பர் மாதம் கூ-ம் தேதி ஆரம்பமாயிற்றும். இதனால் லண்டனிலிருந்து நேராகப் பம்பாய்க்கும் இந்தியாவிலுள்ள இதர பட்டணங்களுக்கும் பர்மா, சிலோன், பாரசீகம், சயாம் முதலிய தேசங்களுக்கும் செய்தியனுப்பப் பொதுஜனங்களுக்கு சௌகரியம் உண்டாகும்.

ஃ ஃ

ஸ்ரீமதி தாமஸ் என்னும் உ0வயதுள்ள வேல்ஸ் தேசத்தைச் சேர்ந்த பெண் மென்ராத்திலிருந்து செப்டம்பர் மாதம் காலை ச-மணிக்குப் புறப்பட்டு கஉ மைல் அகலமுள்ள பிரிஸ்டல் கால்வாயை நீந்திக் கடந்து கக-ரு0 மணிக்கு ஸூபர்மெயர் என்னுமிடத்தில் கரையேறினள். ஸ்ரீமதி தாமஸ்தான் இதனை முதன் முதல் நீந்திக் கடந்தவள்.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் கூ-ம் தேதி லண்டனில் டொனல் வில்லியம்ஸ் என்ற பள்ளிச்சிறுவன் வாயில் மின்சாரக் கம்பியை வைத்துக்கொண்டால் சத்தம் அதிகமாகக் கேட்குமென்று பரிசோதனை செய்தானாம். ஏதோ அஜாக்கிரதையினால் அந்தப் பையன் சரீரத்திற்கும் பூமிக்கும் சம்பந்தம் ஏற்படவே அவன் மரணமடைந்தானாம்.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் எ-ம் தேதி லண்டனில், பிரிட்டிஷ் இந்தியா கவர்ன்மெண்டு நிபுணரான மிஸ்டர் டபிளியூ. ரெய்ட்டு காகிதத்தின் உபயோகம் மிக அதிகரித்து வருகிறபடியால் மூங்கில்களை காகிதத் தொழிலுக்கு உபயோகப் படுத்தலாமென்றும் அதற்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள பிரதேசங்களில் மூங்கில்களை உற்பத்தி செய்யலாம் என்றும் யோசனை கூறினாராம்.

ஃ ஃ

இங்கிலாந்தில் லிச்டன்பர்க் என்ற விடத்தில் ஒரு தொழிலாளி பண முடையால், க0 பவுனும் ஒரு மோட்டார் லாரியும் கொடுத்த ஒரு நண்பனுக்குத் தன் மனைவியை விற்றுவிட்டானம். மனைவியும் சம்மதித்துத் தன்னை விலைக்கு வாங்கிய புதுக்கணவனிடம் இரண்டு மூன்று மாதங்கள் இருந்துவிட்டுத் திரும்பவும் பழைய கணவனிடம் சென்று விட்டாளாம். அதற்காகப் புதுக்கணவன் சிவில் கோர்ட்டில் வழக்குத் தொடரப்போவதாகத் தெரிகிறது.

## தாயகம்.

ஸ்தல ஸ்தாபன மந்திரி ஸ்ரீ கணேச சுத்த சிங் மீது பீகார் ஒரிசா சட்டசபையில் கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் தோல்வியடைந்தது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி அலகாபாத் முஸ்லீம் அபேட்சகர் தமது நியமனத்தைப் பதிவு செய்யும் பொருட்டு ஆபீசுக்குப் பெண் உடை தரித்துச் சென்றாராம்.

ஃ ஃ

ஆகஸ்டு மாதம் உஅ-உ இரங்கோன் இந்திய அச்சுத்தொழிலாளர் அபிவிருத்தி சங்க ஆதரவில், சமரச சன்மார்க்க சங்கக் கௌரவப் பிரசாரகர் திரு அற்புதானந்த சுவாமி அவர்களின் தலைமையின்கீழ் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது என்று ஒரு அன்பர் எழுதுகிறார்.

ஃ ஃ

காராச்சியில், சிந்து மதரஸா கலாசாலை ஆசிரியர் திருட்டுத்தனமாக டாக்டர் பட்டம் வைத்திருப்பதாய் டர்ஹாம் சர்வகலாசங்க ரிஜிஸ்டிரார் செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி 'சிந்து அப்சர்வர்' பத்திரிகைக்கு எழுதியிருக்கிறாராம்.

ஃ ஃ

காராச்சியில் ககஉகூ-ஜனவரியில் காணமற்போன தின ரஸ்மல் என்ற ஹிந்துவாலிபர் இஸ்லாத்தில் சேர்க்கப் பட்டபின் நாளிது செப்டம்பர் மாதம் எ-ம் தேதி ஜூடிஷியல் கமிஷனர் முன்பு ஆஜர் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் கூ-ம் தேதி அலகபாத்தைச் சேர்ந்த கார்வால் ஜில்லாவில் வெள்ளத்தால் தானியமார்க்கெட்டில் நிலக்ஷம் ரூபாய் சேதமும், கூ உயிர்ச் சேதமும் ஏற்பட்டதாகவும் தந்திப்போக்குவரத்து ச நாள் தடைப் பட்டிருந்ததாகவும் தெரிகிறது.

ஃ ஃ

காசியில் புதிதாகக் கட்டப்படும் ஒரு வீடு செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி இடிந்து விழுந்ததினால் வீட்டுச் சொந்தக்காரரும் ஏ-வயதுள்ள அவருடைய பெண்ணும் வேறிரண்டு வேலைக்காரர்களும் உயிர் துறந்தனர் எனத் தெரிகிறது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி, லாகூரில் பல தடவையாக கசைக்கிள்களைத் திருடிய ஒரு இமாமுக்கு கூ வருடக்கடுங்காவல் தண்டனையும் உதவியாயிருந்து விற்றுக்கொடுத்தவருக்கு ச வருடக் கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

புனவில் நான்கு நாள் தங்கியிருந்த இரண்டு ஐரோப்பியர்கள் பலரிடம் பணம் கொடுக்காமல் பல சாமான்களை வாங்கிக்கொண்டு ஓடிப்போய் விட்டதாகப் போலீஸார் புலன் விசாரித்து வருகிறார்கள். அவர்கள் தாம் தங்கியிருந்த ஹோட்டல் மானேஜரையும் ஏமாற்றி விட்டனராம்.

ஃ ஃ

ககூஉஎ ஆகஸ்டு கஅ-ம் தேதி வெளிவந்த 'லீட்' பத்திரிகையில் அடங்கியிருந்த வகுப்புத் துவேஷ விஷயங்களுக்காக 'லீட்' பத்திரிகையின் ஆசிரியரையும் அச்சிடுபவரையும், வெளியிடுபவரையும் கடிதுஏ பிரிவிப்படி கைது செய்து வழக்குத் தொடர பாஞ்சால சர்க்கார் உத்திரவிட்டிருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

நாகபுரியில் மீண்டும் செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி குழப்பம் ஏற்பட்டு முகமதியர்களுக்கும் இந்துக்களுக்கும் சச்சரவுகள் நடந்துவருவதால் கடைகளெல்லாம் மூடப்பட்டிருக்கின்றனவாம். நவம்பர் ரு-ந் தேதிவரை எவரும் தடி முதலிய ஆயுதமேந்திச் செல்லக் கூடாதென்று தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

இலங்கையிலிருந்து சைக்கிளில் உலக யாத்திரை செய்யும் ஸ்ரீ வடிவேலு என்பவர் ஜப்பான், சீனு, சையாம், முதலான பல கீழ்ப் பிரதேசங்களுக்குச் சென்று வந்து நாளிது செப்டம்பர் மாதம் ரு-ம் தேதி காசி போய்ச் சேர்ந்தாராம். அங்கிருந்து ஆப்கானிஸ் தானத்திற்கும், பாரசீகத்திற்கும் பிரயாணமானர் என்ற செய்தி யெட்டுகிறது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் எ-ந் தேதி பரோடா ரயில்வே ஒர்க்ஷாப் உத்தியோகஸ்தர்கள் ஷை அரசாங்கச் சொத்தைச் சொந்தத்திற்கு உபயோகப்படுத்திக் கொண்டதாக அரசாங்கத்தார் ரயில்வே உத்தியோகஸ்தர் பலர் வீட்டில் சோதனை போட்டதால் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டனர் எனத் தெரிகிறது.

ஃ ஃ

பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலிருந்து திரும்பிவந்து வேலை அகப்படாமல் தவித்துக் கொண்டிருக்கும் இந்தியர்களுக்கு இனமாகக் கொடுக்கச் செழிப்பான பூமியில் ஒரு லட்சம் ஏக்கர் ஒதுக்கிவைத்திருப்பதாகவும் அவசியமான இதர வசதிகளும்செய்து கொடுப்பதாகவும் குவாலியர் சமஸ்தானம் தீர்மானித்திருப்பதாய்த் தெரிகிறது.

ஃ ஃ

பம்பாய்க்கடுத்த பாரேல் என்னுமிடத்திலுள்ள ஷாபூர் ஜீபரோசா மில்லின் மானேஜர் ஷெமில்லில் வேலை பார்த்துவந்த பெண் தொழிலாளரை வேலையிலிருந்து நீக்கி விட்டதற்காக செப்டம்பர் கூ-ம் தேதி இரவு ஷை பெண்கள் மானேஜர் காரியாலயத்திற்குள் நுழைந்து மானேஜரை கம்புகளால் அடித்துத் துன்புறுத்தியதால் மானேஜர் இறந்துவிட்டதாகச் செய்தி ஒன்று கூறுகிறது.

ஃ ஃ

நாளிது செப்டம்பர் மாதம் முதல் தேதி ஜேய் பூரில் ஒரு போலீஸ்காரனுக்கும் வண்டிக்காரனுக்கும் ஏற்பட்ட சச்சரவால் நகரத்துப் பொதுஜனங்கள் உத்தியோகஸ்தர்கள் மீது வெறுப்புக்கொண்டு கலகம் செய்ய ஆரம்பித்தார்களாம். அதனால் ஷை யூர் மகாராணி உண்ணாவிரதம் மேற்கொண்டிருப்பதாகவும் பிரஜைகளை சமாதானப்படுத்தும் வரை விரதத்தை விடப்போவதில்லை என்றும் சபையின் தலைவருக்கு அறிவித்திருப்பதாகவும் தெரிகிறது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் கூ-ம் தேதி காராச்சியிலிருந்து மெக்காவுக்குச் செல்ல ஒரு முஸ்லீம் யாத்ரீகர் ஒரு ஐரோப்பிய போலீஸ் சார்ஜண்டான மோட்டார் ஷாவிடம் மூன்று நூறு ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்து டிக்கட் வாங்கும்படி சொன்னாராம். அதில் நூறு ரூபாய் நோட்டு ஒன்றை ஷை சார்ஜண்டு மோசம் செய்ததாக யாத்ரீகர் வழக்குத் தொடர்ந்தாராம். சார்ஜண்டுக்கு ச மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

## தமிழகம்.

திருநெல்வேலி பாளையங்கோட்டை முனிசிபாலிடியார் செப்டம்பர் மாதம் ரு-தேதி நடந்த கூட்டத்தில் போலீஸ் அதிகாரிகளின் வண்டிகளுக்குத்தீர்வை ஏற்படுத்த வேண்டாமென்று தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் ரு-ந்தேதி கும்பகோணத்திலிருந்து மேலக்காவேரிக்குச் சென்ற படகு கவிழ்ந்ததால் பலர் காயமடைந்ததுடன் அநேக எண்ணெய் டின்களும் தண்ணீரில் அடித்துக்கொண்டு போகப்பட்டுவிட்டன.

ஃ ஃ

நாளிது செப்டம்பர் மாதம் உ-ம் தேதி இரவு திருநெல்வேலி டவுன் ரயில்வே ஸ்டேஷன் பக்கத்திலுள்ள தென்பத்து பறச்சேரியில் தீப்பிடித்து சுமார் ரூ0 குடிசைகள் எரிந்து போயின. நஷ்டம் ரூ உ000 இருக்குமெனத் தெரிகிறது.

ஃ ஃ

கும்பகோணம் டவுன் போலீஸ் ஸ்டேஷனில் வேலை பார்த்துவந்த மூன்று போலீஸ் உத்தியோகஸ்தர்கள் இரண்டு ஸ்திரீகளை மருட்டி அடித்துப் பணம் பறித்ததாக சப் கலெக்டர் கோர்ட்டில் ஒரு வழக்குக் கொண்டு வரப் பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

மதுரை அமெரிக்கன் கல்லூரியைச் சேர்ந்த ஹாஸ்டல்களில் வசிக்கும் ஹிந்து மாணவர்கள் சிலர் சென்ற விநாயகசதுர்த்தியன்று விநாயகபூஜை செய்ததால் ஷெயார்கள் பூஜைசெய்தது பிசகென்று ஒரு கமிட்டியார் விசாரித்துவருவதாய்த் தெரிகிறது.

ஃ ஃ

இராமநாதபுரம்ஜில்லா மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தி, முஸ்லீம் மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ ஷாபிமுகமது முதலியோரின் சௌகரித்தை உத்தேசித்து அந்த இரண்டு மகாநாடுகளும் செப்டம்பர் மாதம் உச, உரும் தேதிகளில் கூட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

மதுரைக் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ. பி. மகாதேவ ஐயர் வீட்டில் சு000ரூபாய் பெறுமான நகைகள் செப்டம்பர் மீ எ-ம் தேதி இரவு திருட்டுப் போய் விட்டதற்காக அவ்வீட்டில் வர்ணவேலை செய்துகொண்டிருந்த ஒருவனைப் போலீசார் கைது செய்திருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

புதுக்கோட்டை முனிபசில் சபைக் கூட்டமொன்று நாளிது செப்டம்பர் மாதம் அ-ந்தேதி கூடிய பொழுது மகாத்மாவின் புதுக்கோட்டை விஜயத்தை முன்னிட்டு அவருக்கு ஒரு வரவேற்புப் பத்திரமளிக்க வேண்டுமென்று கொண்டுவந்த தீர்மானம் தோற்றுவிட்டதாம்.

ஃ ஃ

செப்டம்பர் மாதம் கூ-ம் தேதி கும்பகோணம் சர்க்கார் கல்லூரியில் படிக்கும் மாணவர்கள், சிவகங்கைக்கு ஹாக்கிப்பந்து விளையாட வரப்போவதற்காகப் படிச்செலவு சிறிது கூடத்தரவேண்டுமென்று தலைமை ஆசிரியரைக்கேட்டுக்கொண்டதற்கு "மாணவர்கள் பிச்சைக்காரர்கள்" என்று தலைமை ஆசிரியர் சொன்ன வார்த்தையைக் கேட்டு மனம்பொறுது கூட்டங்கூடி தான் சொன்ன வார்த்தைகளை தலைமை ஆசிரியர் வாபீஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும் இல்லையேல் கலாசாலை எந்த விளையாட்டுகளிலும் தாங்கள் கலந்துகொள்ளுவதில்லை என்றும் தீர்மானம் செய்திருக்கிறார்களாம்.



## நமது தபால்பெட்டி.

இரங்கூன்.

தனவைசிய இளைஞர் சங்கம்:—நமது சங்கத்தின் பால் கொண்டுள்ள அன்பின் மிகுதியால் அழைப்பு மணி ஒன்றை நமக்கு உதவிய திருவாளர் அரு. செ. மந்தையன் செட்டியார் (சுப. எ. சுப. கடை அதிபர்) அவர்கட்கும் கீழ் விரிப்பு (சமுக்காளம்) இரண்டு உதவிய திருவாளர்களான ஆ. சுப. சு. வெ, வெ, கரு. வே. சா, ராம. அ. அ. சிவ, சுப. எ. எ, சுப. எ. சுப, குப. அரு, பழ. பி. மு, அவர்கட்கும் நமது மனமார்ந்த நன்றி யறிதலைச் செலுத்துகின்றோம்.

நமது அருஞ்சங்கத்திற்குப் பல துறைகளில் உதவி புரிந்தும் ஈண்டிக்கூடிய இளைஞர் மகாநாட்டில் வரவேற்புத்தலைமை தாங்கியும் நமது நாடும் சமூகமும் முன்னேறுவதற்கான ஓர் தீர்மானம் நிறைவேறுவதற்கு முன்னின்று தக்கமேற் கோளுடன் விளக்கிக் காட்டி நிறைவேற்றியும் பல நற்றொண்டாற்றிய கண்டனூர் திருவாளர், மு. ராம. சோமசுந்தரச் செட்டியார் (பிகு. நா. கடை அதிபர்) அவர்கள் இப்பதினேழாம் நாள் நாவாயில் தாய் நாடு செல்வது கருதி உபசார வாழ்த்துக் கூற முகத்தான் பதினேந்தாம் நாள் ஓர் கூட்டமும், இச்சங்கத்தைத் தாபிப்பதற்கு அரும்பெரும் முயற்சியோடு முன்னின்று உதவி புரிந்தும் நம்போன்ற இளைஞர்கள் முன்னேறுவதற்கான பல நற்றுறைகளில் நடாத்தியும், வாலிபர் மகாநாட்டைக் கூட்டி அரும்பெருந் தீர்மானங்களை நிறைவேற்றுவதற்கு வேண்டிய பெரிய வேலையைத் தாங்கி நிறைவேற்றியும், இன்னும் நம்மால் எடுத்துப் புகல முடியாத அவ்வளவு பெரும் உதவிகளைப்புரிந்தும், நம் சங்கத்தின் தலைமைப் பதவியை ஏற்றும், இருக்கின்ற சிறுவயல் திருவாளர் மு. சோமசுந்தரச் செட்டியாரவர்கள் (அப. சொ. கடை அதிபர்) தாய் நாடு செல்வது கருதி, நட்பின் மொழி கூறி தேயிலைப்பானம் செய்யும் முகத்தான் பதினாறும் நாள் ஓர் கூட்டமும் திரு. மிகு. முத்தரசப்ப செட்டியாரவர்கள் (தாயுமானவர்) தலைமையில் கூட்டப்பெற்றன. அவ்விரு தினங்களிலும் பல அன்பர்கள் அன்னாரின் அரும்பெருஞ் செயல்களைப்பற்றிச் சொற்பொழிவாற்ற தேயிலைப் பான முதலியன அருந்தியபின் தலைவரவர்களின் தக்க முடிப்புரையுடன் நடராஜப் பெருமானுக்குத் தூப தீபாராதனைகள் நடாத்திக் கூட்டங்களிரண்டும் இனிது நிறைவெய்தின, என ஷை சங்கக் காரியதரிசி எழுதுகிறார்.

ஃ ஃ

மடாதிபதிகள்.

இக்காலத்தில் மடாதிபதிகளென்போர் குபேரனை யொத்து வாழ்ந்து வருகின்றார்களே யன்றி அவர்களால் உலகமக்கள் எவ்வித நன்மையும் அடையக்கண்டிலேம். மடாதிபதிகளானோர் தங்கள் தங்கள் கடமைகள் இன்னவை யென்று சற்றும் ஆராயாது கண்மூடி யிருக்கின்றனர். உலக சீர்திருத்தம், கல்வி அபிவிருத்தி, மதோபதேசம் முதலியவை புரிந்து நாட்டிலுள்ள இன்னல்களைத்தீர்த்து மக்களை இன்புறச் செய்ய வேண்டியது மடாதிபதிகளின் கடமையன்றோ? நமது நாடு இன்று இந்நிலையில் இருப்பதற்குக் காரணம் முற்காலத்தில் நம்மிடையிற்றோன்றிய பல மடாதிபதிகளாலும் அறிஞர்களாலும் அல்லவா? எனவே இப்போது நாம் கண்திறந்து தேசமுன்னேற்றத்திற்குப் பாடுபடவேண்டியது நமது அரும் பெரும் கடனேயாகும். இதற்கிணங்கத் தற்போது திருப்பா திருப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் சென்ற சிலமாதங்களாகச் சென்னையில் பல பகுதிகளில் அரும்பாடு பட்டுப் பிரசாரம் செய்துவருகின்றார் என்பது நாம் அனைவரும் அறிந்ததே. அதுபோல் மற்றுமுள்ள மடாதிபதிகளும் ஆங்காங்கு தேசசஞ்சாரம் செய்து தேச முன்னேற்றத்திற்கான வழிகளைச் செய்ய முன் வருவார்களாகில் நம்நாடு இன்றைக்கே சுயராஜ்யம் அடையுமென்பது திண்ணம். தற்காலம் மடாதிபதிகளிடம் அகப்பட்டிருக்கிற பணத்தை செலவு செய்வீர்களானல் எத்தனையோ தேசிய பாடசாலைகள், குருகுலங்கள்; வைத்தியசாலைகள் ஸ்தாபிக்கலாம். அனதை நிலையங்கள் கட்டலாம். இவ்வகையான தர்ம ஸ்தாபனங்கட்குப் பொருளீட்

(அம் பத்தி பார்க்க.)

## அடிகளின் உண்மை வாழ்வு.

### கரும் பிளேக் நோய்.

மகாத்மா "நவஜீவனில்" எழுதுவது.

பகுதி ச.

அத்தியாயம் கரு.

அக்காலி வீட்டை நான் ஆதீனம் செய்துகொண்டதற்காகவும் நோயாளிகளின் பராமரிப்பை மேற்கொண்டதற்காகவும் நகரசபைக் குமஸ்தா எனக்கு வந்தனங்கூறினர். அவ்வித அவசர சந்தர்ப்பத்தில் நிலைமையைச் சமாளிக்க நகரபரிபாலன சபைக்குப் போதிய வசதிகளில்லை யென்றும் ஆனல் தங்களாலியன்ற உதவிகளைச் செய்வதாகவும் தெரிவித்தார். தனது கடமையை உணர்ந்துகொண்டதும் நகரபரிபாலன சபை வேண்டுவன செய்யப்பின்தங்கவில்லை.

மறுதினம் காலியாகவிருந்த, சாமான்கள் வைக்கும் கட்டிடமொன்றை (கிடங்கு) நகரசபையார்என்வசம்ஒப்புவித்து நோயாளிகளை அங்கு கொண்டுபோய் வைத்துக் கொள்ளலாமென்று யோசனை கூறினர். ஆனல் அக்கட்டிடத்தைச் சுத்தம் செய்யும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அக்கட்டிடம் வெகு வெகு அசுத்தமாகவிருந்தது. நாங்களே அதனை முற்றும் சுத்தம்செய்தோம். தர்ம சிந்தையுள்ள சில இந்தியர்களின் உதவியைக்கொண்டு சில படுக்கைகளும் பிற சில வசதிகளும் செய்துகொண்டோம். ஓர் தற்கால ஆஸ்பத்திரியை இவ்வாறாக ஏற்படுத்திக்கொண்டோம். நகரபரிபாலனசபையார் தங்கள் வசமுள்ளதாதியொருத்தியை எங்களுக்கு உதவி செய்யுமாறு அனுப்பினார்கள். அவள் ஆஸ்பத்திரி தளவாடங்கள், பிராந்திமுதலியவைகளோடு வந்து சேர்ந்தாள். டாக்டர் காட்பிரேயே இன்னும் நோயாளிகளின்பராமரிப்பைக் கவனித்துக்கொண்டிருந்தார்.

அத்தாதி மிகுந்த ஜீவகாருண்யமுள்ளவள். நோயாளிகளின் பராமரிப்பை மேற்கொள்ளத் தயாராயிருந்தாள். ஆனல் அத் தொத்துநோய் அவளைப்பற்றிக் கொள்ளுமெனப் பயந்து நாங்கள் அவளை நோயாளிகளினிடம் அணுகவிடவில்லை.

நோயாளிகளுக்கு அடிக்கடி பிராந்தி கொடுக்கவேண்டுமென்று வைத்தியர் எங்களிடம் கூறியிருந்தார். முன்னெச்சரிக்கையாக எங்களையும் உட்கொள்ளும்படி அத்தாதி கூறினள். அவளும் சாப்பிட்டாள். ஆயினும் நாங்கள் அதனைத் தொடக்கூட மாட்டோம். நோயாளிகளுக்குங்கூட அது பயனளிக்கும் என்று நான் நம்பவில்லை. பிராந்தி சாப்பிடாமலிருக்க மூன்று நோயாளிகள் தயாராயிருந்தனர். எனவே டாக்டர் காட்பிரே அவர்களது அனுமதி பெற்று அவர்களுக்கு மண் சிகிச்சை செய்தேன். ஈரமண்ணை அவர்களது நெஞ்சிலும் தலையிலும் வைத்துக் கட்டினேன். அவர்களில் இருவர் பிழைத்துவிட்டனர். அக்கிடங்கில் (கட்டிடத்தில்) இருக்கையிலேயே இருபது பேர் இறந்துபோயினர்.

இதற்கிடையில் மற்ற முறைகளைக் கையாளுவதில் நகர பரிபாலனசபையார் மிகுந்த சுறுசுறுப்புக் காட்டிவந்தனர். ஜொஹானஸ்பர்க் நகரத்திலிருந்து எழு மைல் தூரத்திற்கு அப்பால் தொத்துநோய் வியாதியஸ்தர்களுக்கென தனி சிகிச்சாசாலையொன்றிருந்தது. அதற்கருகாமையிலுள்ள கூடாரங்களுக்கு பிழைத்திருந்த மற்ற மூன்று நோயாளிகளையும் கொண்டுசேர்த்தோம். புதிதாக நோய்பற்றிக்கொண்டவர்களையும் அங்கு அனுப்ப ஏற்பாடுகள் செய்தனர். இவ்வாறாக எங்களது வேலைப் பொறுப்பு எங்கள் கையைவிட்டகன்றது.

சில தினங்களுள் எங்களுக்கு உதவி செய்த தாதிக்கு நோய்கண்டு அதுகாரணமாக அவள் இறந்துபோனள் என்ற செய்தி யெட்டியது. பிரஸ்தாப இருநோயாளிகளும் எவ்வாறு பிழைத்தனர் என்பது எங்களுக்குத் தெரியவில்லை. எனினும் அவ்வனுபவம் மண்சிகிச்சையில் எனக்குள்ள நம்பிக்கையை யதிகப்படுத்தியதோடு, பிராந்தி மருந்தல்ல என்ற எனது எண்ணத்தை உறுதிப்படுத்தியது. மண்சிகிச்சையிலுள்ள எனது நம்பிக்கைக்கும், பிராந்தியில் எனக்குள்ள அவநம்பிக்கைக்கும் தக்க காரணங்களில்லை யென்பது எனக்கு நன்றாகத் தெரியும். என்றாலும் அப்பொழுது நான் பெற்ற அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள முடியாது. அவ்வபிப்பிராயமே இன்னும் எனக்கு இருந்து வருகிறது. எனவே அதனை இங்கு குறிப்பிடவேண்டுவது அவசியமென எண்ணினேன்.

பிளேக்நோய் தோன்றியவுடன் பத்திரிகைகளுக்கு ஓர் கடுமையான கட்டுரை எழுதினேன். இந்தியர் வசிக்கும் பகுதியினை நகர பரிபாலன சபையார் கைப்பற்றிக் கொண்ட பின் சுகாதார வசதிகள் பெரிதும் புறக்கணிக்கப்பட்டதற்கும் பிளேக் நோய் தோன்றியதற்கும் நகரபரிபாலன சபையாரே பொறுப்பாளிகளென அதில் குறிப்பிட்டிருந்தேன். இக் கட்டுரையின் பயனாகத் திரு. ஹென்ரி போலக்என்பாரின் நட்பையடைந்தேன். காலஞ்சென்ற ரெவரண்டு ஜோஸப் டோக் அவர்களதுநட்பைப் பெறுவதற்கும் ஓர் வகையில் அக்கட்டுரை காரணமாயிருந்திருக்கிற தென்னலாம்.

முன்னர் ஓர் அத்தியாயத்தில், ஓர் சைவ விடுதியில் நான் சாப்பிடுவது வழக்கமெனக் கூறியிருக்கிறேன். இவ்விடுதியில் திரு. அல்பர்ட்வெஸ்ட் என்பாரைச் சந்தித்தேன். இங்கு ஒவ்வொரு நாளும் நாங்களிருவரும் சந்திப்போம். இராப் போஜனத்திற்குப் பின்னர் இருவரும் வெளியே உலாவச் செல்லுவது வழக்கம். திரு. வெஸ்ட் அவர்கள் ஓர்அச்சுக்கூடத்தில் பங்குக்காரராயிருந்தார். பிளேக் நோய் தோன்றியதைப்பற்றி நான் பத்திரிகைகளுக்கு எழுதியிருந்த கடிதத்தைப் படித்தார். என்னை விடுதியில் காணுததும் அவருக்கு ஒன்றும் ஓடவில்லை. கவலை யேற்பட்டுவிட்டது.

நானும்எனது சகஊழியர்களும், தொத்து நோய்கள் தோன்றிய காலங்களில் குறைவாகமட்டுமே உணவுகொள்ள வேண்டுமென்று நாங்கள் முன்னரே தீர்மானித்திருந்ததற்கிணங்க, பிளேக் நோய் தோன்றியது முதல் உணவு விகிதத்தைக் குறைத்துவிட்டோம். எனவே இக்காலங்களில் இராப்போசனம் உட்கொள்ளுவதை நான் நிறுத்திவிட்டேன். மற்ற விருந்தாளிகள் வந்துசேரு முன்னரே இடைவேளை ஆகாரம் செய்வதை நான் முடித்துவிடுவேன். அவ்விடுதிச் சொந்தக்காரரை எனக்கு நன்றாகத் தெரியும். எனவே அவரிடம், நான் பிளேக் நோயால் வருந்துபவர்களைப் பராமரித்து வருவதால் கூடியவரை நண்பர்களிடையும் பிறரிடையும் கலந்து கொள்ள விரும்பவில்லை யென்பதைத் தெரிவித்திருந்தேன்.

விடுதியில், இரண்டு மூன்று தினங்களாக என்னைக் காணுததும் ஒருநாட் காலையில் நான் எழுந்து உலாவும் பொருட்டு வெளிச் செல்லத் தயார் செய்துகொண்டிருக்கும் பொழுது திரு வெஸ்ட் எனது அறைக்கு வந்து கதவைத் தட்டினர். நான் கதவைத் திறந்ததும் திரு. வெஸ்டு "உங்களை விடுதியில் காணவில்லை. உங்களுக்கு ஏதாவது தீங்கு நேர்ந்துவிட்டதோ என்று உண்மையில் பயமடைந்துவிட்டேன். எனவே காலையில் வந்தால் உங்களை உங்களது இருப்பிடத்தில் நிச்சயமாகக் கண்டுகொள்ளலாமென்றெண்ணிக் காலையில் வந்து பார்ப்பதென உறுதி செய்து கொண்டேன். நல்லது. நான் உங்கள் வசமுள்ளேன். நீங்கள் எவ்வாறு வேண்டுமாயினும் என்னை உபயோகித்துக் கொள்ளலாம். நோயாளிகளைப் பராமரிக்கத் தயாராயிருக்கிறேன். என்னைச் சார்ந்திருப்பவர்கள் எவருமில்லை என்பது உங்களுக்குத் தெரியும்" என்றார்.

உடனே அவருக்கு எனது வந்தனத்தைச் செலுத்திவிட்டு ஒரு கணங்கூட யோசிக்காமல், 'உங்களைத் தாதி வேலைக்கு வைத்துக்கொள்ள மாட்டேன். புதிதாக எவரையும் நோய் பற்றிக்கொள்ளவில்லையெனின் இரண்டொரு தினங்களில் எங்களது வேலை தீர்ந்துவிடும். அவ்வேலையினின்றும் நாங்கள் விடுபட்டு விடுவோம்.

## நமது தபால்பெட்டி.

(முதல் பத்தி தொடர்ச்சி.)

டாமல் நிதி காத்திருந்த பூதம் போல் வாழ்ந்ததினல் உலக மக்கட்கு உண்டாகும் நன்மையென்ன என்பதை அவர்கள் நன்குணரல் வேண்டும். தியாகமூர்த்தியான சுவாமி சிரத்தானந்தர் இவ்வுலகிற்றோன்றி எவ்வாறு பிரகாசித்தனர்? அவர் எத்தனை குருகுலம், தேசியக் கல்லூரிகள் ஏற்படுத்தினார்கள்? உலக சம்ரக்ஷணைக்காக அவர்தம் சரீரத்தையும் தியாகம் செய்தாரன்றோ? முடிவில் அழியாப்புகழையும் அழியாப்பதவியையும் அன்னார் அடைந்தாரல்லவா? அவர் எங்கு சென்றாலும் ஆங்காங்கு மதப்பிரசாரம் செய்யாமலிருந்ததுண்டா? அத்தகைய ஓர் வீர சந்யாசியை நினைக்கும்போது நமது நெஞ்சம் உருகவேண்டும். அவருடையவாழ்க்கையைப் பின்பற்றி நாமும் வாழவேண்டும், என்று ஒவ்வோரு மடாதிபதியும் உணர வேண்டியது அவர்கள் கடமையே யாகும். எனவே ஒவ்வொரு மடாதிபதியும் தங்கள் மடத்தின் சார்பாகப் பற்பல இடங்களிலும் பாடசாலைகள் ஏற்படுத்தி அங்கு பயில்கின்ற மாணவர்கட்கு உணவு முதலியன தர்மமாகவே கொடுக்கும்படிச் செய்தல்வேண்டும். கிறிஸ்துமதக்கொள்கையைப் பாதிரிமார்கள் யாண்டும் பரவச்செய்வதைப் போல் நாமும் நமது மதக்கொள்கையை ஆங்காங்கு பரவச்செய்து நிலைநிறுத்தல் வேண்டும். கதரபிவிருத்தியின் பொருட்டு உழைப்பதுமன்றித் தாமும் கதராடை அணிய வேண்டும். மகாத்மா காந்தியடிகள் நமது நாட்டில் விஜயம் செய்யும்போது கதர்நிதிக்காகப் பணவுதவி செய்தல்வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு மடாதிபதியும் முன்வருவாராகில் நமது நாடு மிக விரைவில் மேன்மை அடைந்து மகிழ்ச்சியுறலாம். எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக' என கல்லுப்பட்டி சுவாமி சிவாநந்த ஸரஸ்வதி எழுதுகிறார்.

---

இருந்தாலும் ஓர் விஷயம் இருக்கின்றது.' என்று விடையிறுத்தேன்.

"ஆம். அதென்ன?"

"டர்பனில் நடந்துவரும் இந்தியன் ஒப்பினியன் அச்சுக்கூடப்பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொள்ள முடியுமா? திரு மதன்ஜித்து அநேகமாக இங்கு வேலை செய்யவேண்டியிருக்கும். அங்கு வேலையைக் கவனிக்க யாராவது ஒருவர் தேவை. நீங்கள் அங்கு செல்லக் கூடுமாயின் பின்னர் அதைப்பற்றிய கவலையே எனக்கிருக்காது.

"எனக்கு ஓர் அச்சுக்கூடமிருக்கிறதென்பது உங்களுக்குத் தெரியும். அநேகமாக செல்லக்கூடுமென் றெண்ணுகிறேன். எனினும எனது முடிவான பதிலை மாலையில் தெரிவிக்கிறேன். மாலையில் உலாவச் செல்லும் பொழுது அதைப்பற்றிப் பேசிக் கொள்ளுவோம்."

என மனம் பூரித்தது. மாலையில் பேசினேம். அவர் செல்ல ஒருப்பட்டார். சம்பளத்தைப்பற்றி அவருக்குக்கவலையேயில்லை. ஏனெனில் பொருள் திரட்ட வேண்டுமென்பது அவரது கொள்கையல்ல. என்றாலும் மாதம் க0 பவுன் சம்பளமென்றும் லாபம் ஏதாவது கிடைப்பின் அதில் ஓர் பகுதி கொடுப்பதென்றும் முடிவு செய்து கொண்டோம். மறு தினமே திரு. வெஸ்ட் மாலை வண்டியில் டர்பனுக்குப் பிரயாணமானர். போகும்பொழுது தனது கிலுவைகளை வசூலிக்கும் பொறுப்பை என் வசம் ஒப்புவித்து விட்டுச் சென்றார். அன்று முதல் நான் தென்னப்பிரிக்காவை விட்டுப் புறப்படும்வரை எனது சுக துக்கங்களை அவரும் ஏற்று அனுபவித்து வந்தார்.

திரு. வெஸ்ட் இங்கிலாந்திலுள்ளலிங்கன் ஷைரைச் சேர்ந்த லௌத் எனும் ஊரிலுள்ள ஓர் குடியான குடும்பத்தைச் சேர்ந்தவர். பள்ளிக்கூடப்படிப்புசொற்பமேபெற்றிருந்தார். என்றாலும் அனுபவத்தாலும் தன் முயற்சியாலும் வெகு வெகு அதிகம் கற்றிருந்தார். அவர் பரிசுத்தமானவர். நிதான புத்தியுள்ளவர், தெய்வபக்தியுள்ளவர், ஜீவகாருண்யமுள்ளவர்.

இனி வரும் அத்தியாயங்களில் அவரைப் பற்றியும் அவரது குடும்பத்தைப்பற்றியும் நாம் அதிகம் அறிந்துகொள்ளலாம்.

## உள்ளுறை.





காளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
பிரபவ ஸு ஆவணி மூ ௩௦ உ

# வெட்ட வெளிச்சம்.

காங்கிரசும் தேசபக்தியும் பார்ப்பன ஜாதிப்பற்றை மீறி நிற்கவில்லையென்று நாம் பலமுறை குறிப்பிட்டிருக்கிறோம் தேசியஸ்தாபனங்களிலும் பலவகைப்பட்ட சபைகளிலும் ஸ்தாபனங்களிலும் பார்ப்பனர் ஆதிக்கம் பெறுவது அவர்களது ஜாதி நலத்திற்கென்பது ஆங்காங்கு சிறிது வெளிப்பட்டுவருகிறது. இவ்வுண்மை சமீபத்தில் மதுரையில் நடைபெற்ற முனிஸிபல் எலெக்ஷனில் வெட்ட வெளிச்சமாகி விட்டது. மதுரை முனிஸிபாலிடியில் காங்கிரஸ்காரரான திரு. வேதராமய்யர் இருந்த ஸ்தானம் காலியாயிற்று. இதற்கு மீண்டும் ஒரு காங்கிரஸ் வாதியை நிறுத்துவதென்று கூடிய காங்கிரஸ் கூட்டத்தில் பெரும்பான்மையோரின் முடிவின்படி திரு. ஜியார்ஜ் ஜோஸப் நின்றார். இவருக்கு எதிரியாக நிற்க விரும்பியவர் வக்கீல் திரு. ராமநாதய்யராவர். இவரும் காங்கிரஸ் காரரே. காங்கிரஸ் கூட்டத்தில் இவர் நிற்குமாறு அனுமதிக்கப்படவில்லை. எனவே காங்கிரஸ் அங்கத்தினர்பதவியை ராஜிநாமாச்செய்துவிட்டு திரு. ஜியார்ஜ் ஜோஸப் அவர்கட்கு எதிரியாக நின்றார். எலெக்ஷனுக்கு முன்னர்,

> "இந்த வார்டிலுள்ள ஊஎ வாக்காளருள் ௬௫0 பேர் பிராமணர். அவர்கள் அவ்வளவு பேரும் காங்கிரஸ் மெம்பர்கள். வாக்காளர்கள் ராஜீய அபிப்பிராயப்படி நடந்தால் காங்கிரஸ் மெம்பர்தான் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். பெரும்பான்மையாகவுள்ள பிராமணர் வகுப்பு வாதங்கொண்டு வாக்குக்கொடுத்தால் நான் தோற்கடிக்கப்படுவேன். பிராமணர் வகுப்பு வாதிகள் என்று ஜஸ்டிஸ்கட்சியார் சொல்லுகிறார்கள். காங்கிரஸ் மெம்பர்கள் எல்லோரும் தேசாபிமானமுடையவர்களென்றும் வகுப்புத்துவேஷமற்றவர்களென்றும் காங்கிரஸ் முடிவு கட்டியிருக்கிறது. வருகிற சனிக்கிழமை இதன் உண்மை தெரியும்."

என்று திரு. ஜோஸப் ஒரு அறிக்கை வெளியிட்டார். என்ன செய்தும் முடிவில் திரு. ஜோஸப் எலெக்ஷனில் தோற்கடிக்கப்பட்டார்.

திரு ஜியார்ஜ் ஜோஸப் தேசாபிமானங் காரணமாக ஒத்துழையாமைக் காலத்தில் வக்கீல் தொழில் விட்டார். சிறைக்கும் சென்றார். மகாத்மாவின் "யங் இந்தியா" பத்திரிகைக்குச் சில காலம் ஆசிரியராகவு மிருந்தார். மிகுந்த ஊக்கமுள்ளவர். பாரிஸ்டர். காங்கிரஸினால் முனிஸிபல் சபைக்கு நிறுத்தப்பட்டவர். காங்கிரஸ்காரர் மெஜாரிடியாகவுள்ள பகுதியில் தோல்வி பெற்றார். காங்கிரஸ் அங்கத்தவராக இருந்து முனிஸிபல் தேர்தலுக்குத் தன்னை நிறுத்தாததற்காக ராஜிநாமாச்செய்தஐயரொருவர்வெற்றி பெற்றார். காரணம் முன்னவர் பார்ப்பனரல்லாதார். பின்னவர் பார்ப்பனர். "என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்? உன் வீட்டுக்கு வந்தால் என்ன தருகிறாய்?" என்ற பார்ப்பனர் நிலை இனிது விளங்கவில்லையா? மற்ற சமூகத்தினரின் கூட்டுறவால் காங்கிரஸ் முதலிய ஸ்தாபனங்களுக்குண்டாகியிருக்கும் செல்வாக்கினை உபயோகித்துத் தங்கள் ஜாதிக்கு ஏற்றமுண்டாக்கப் பார்ப்பனர் முயல்கின்றனரென்னும் உண்மை நாள்தோறும் வெளியாகி வருகின்றது. தேர்தலில் வெற்றி பெறுதலும் தோல்வியுறுதலும் இயல்பான காரியங்களேயாகும். ஆனால் குறிப்பிட்ட இத்தேர்தலின் முடிவு காங்கிரசுக்கு அவமான முண்டாக்கிவிட்டது. தேசிய வாதிகள் வகுப்பு வாதிகளன்று என்று புலம்பும் வாக்கு ஒடிந்து வீழ்ந்தது. தங்களுக்கு வசதிப்படுகிறவரை காங்கிரஸ் வேண்டும் என்ற கொள்கையை திரு. ராமனுதய்யரும் பார்ப்பன ஓட்டர்களும் நிதரிசனப்படுத்திவிட்டனர். இத்தேர்தல் முடிவின் பின்னர், திரு ஜியார்ஜ் ஜோஸப் பின் வருமாறு கூறுகிறார்:—

> "பதினாறாவது வார்டு தேர்தல் முடிவு பிராமணர்களுக்குத்தேசியத்தை விட பிராமணீயந்தான் மேலென்பதையும், அதில் பிராமணர்களின் வகுப்புவாதம் வெற்றி பெற்றதையும், இத்தேர்தலில் என் பிராமண நண்பர்களனைவரும் என்னைக் கைவிட்டு விட்டார்கள் என்பதையும் நன்கு விளக்கியது. இச்செய்கை பிராமணன் தன் பாரம்பரையான வகுப்பு வாதத்திற்கு தேசீயத்தை விட்டுக்கொடுத்ததே யாகுமெனக் கருதுகின்றேன். பிராமண வகுப்பு தனிப்படுத்தி வைக்கப்படும் பேராபத்திலிருப்பதை அவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன். மேலும் வகுப்பு வாதம் சுயநலத்தின் கொள்கை என்பதை அவர்களுக்கு எடுத்துக்காட்டி எச்சரிக்கை செய்வதுடன் பெரும்பான்மையோரின் சுயநலத்திற்கு முன் சிறு பான்மையோரின் சுயநலம் ஒன்றும் செய்ய முடியாதென்பதையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இதுவரையில் நான் மாய்கையிலமிழ்ந்திருந்தேன். பிராமணன் ஒருவனுக்கு தேசிய விஸ்வாசத்தை விட ஜாதீய விஸ்வாசம் தான் பலமானதென்பதைத் தற்போதுதான் நான் கண்டு கொண்டேன்."

இப்பொழுதாவது திரு. ஜியார்ஜ் ஜோஸப் விழித்துக் கொண்டதைப பாராட்டுகிறோம். இவர் நன்கு கற்றவர். பிராமணருடனும் மற்றவருடனும் பல்லாண்டு பழகினவர். தேசியத்துறையில் கலந்து தொண்டியற்றியவர். பார்ப்பன தேசிய நண்பர் பலரைக் கொண்டவர். எனினும் அவர்களின் சூழ்ச்சியை இன்றுதான் கண்டறிந்ததாகக் கூறுகிறார். இப்பேர்ப்பட்ட அறிஞர்களை வளைத்துக் கண்ணைக் கட்டிவைக்கும் பார்ப்பனமாயை சாதாரணமக்களை விடுமா? பார்ப்பனர் வசப்பட்டுக் கிடக்கும் பொது ஜனங்கள் உண்மையுணர்வு கொளுத்தப்பட வேண்டும். இனியாவது பார்ப்பனரல்லாதார் நலனை நாடிப் பார்ப்பன மாயையை யொழிக்குந் துறையில் திரு. ஜியார்ஜ் ஜோஸப் இறங்கி உழைப்பாரென்று நம்புகிறோம்.

---

கதர் அரசர்
காந்தியடிகள் வருகை.

புரட்டாசி மாதம் ௫ம் நாள்
காரைக்குடிக்கு வருகிறார்.

தனவணிக நாட்டில் ஆறு தினங்கள்
சுற்றுப்பிரயாணம் செய்வார்.

அன்பர்கள் அனைவரும்
கதர் நிதிக்கு ஏராளமாகப்
பொருளுதவுங்கள்.

---

# எண்டிசைக் காட்சி.

## சம்பாவனை.

அ. புதூர் திரு. வயி. ராம. அ. இராமநாதன் செட்டியாரவர்கள் பேரன் சித. இராமநாதனுக்கு நாளிது ஆவணி மீ ௨0உ நடைபெற்ற காப்புக்கட்டு புதுமையில் நமது குமரனுக்கு ரூபா ஐந்து சம்பாவனை செய்தனுப்பியுள்ளார்கள். அன்னாருக்கு எமது நன்றி உரியதாகுக.

## இந்து-முஸ்லீம் விஷயம்.

இந்து-முஸ்லீம் பிரச்னை நம நாட்டிலுள்ளோரனைவரது கவனத்தையும ஈர்த்து வருகின்றது. வடநாட்டில் இந்து-முஸ்லீம கலகங்கள நடவாத இடமும நாளும் இல்லையெனலாம. இந்து-முஸ்லீம ஒற்றுமையை நிலைநாட்ட முன்னர், காந்தியடிகள் இருபத்தொரு தினங்கள் உண்ணாவிரதம அனுஷ்டித்ததையும அதனபயனாக டெல்லியில் சர்வகட்சித் தலைவர்களுமடங்கிய ஒற்றுமை மகாநாடு மூன்று நடைபெற்றதையும அனைவரும அறிவர். பின்னரும நிலைமை சரிப்படவில்லை. தறபொழுது சிமலாவில இரு சமூகத்தவரையும ஒற்றுமைபபடுதத முயற்சிகள் நடைபெறுகின்றன. ஓர் மகாநாடும கூட்டபபெற்றுள்ளது. இரு சமூகத்தவரும ஆலோசித்து முடிவு செய்யபபடவேண்டிய விஷயங்களை அறிவித்திருக்கின்றனர். இக்கூட்டத்தின் பயனாகவாவது இந்து-முஸ்லீம ஒற்றுமை ஏற்படும என்று நமபுகிறோம.

## பாரதியார்.

பாரதியாரெனக்கூறின் அவர் யார் என்பதைப்பொதுவாக இந்தியரும் சிறப்பாகத் தமிழகத்தாரும் நன்கறிவர் என்பது ஒருதலை. தமிழகத்தைத் தம் வீரம் பொருந்திய தேசபக்தியூட்டும் கவிகளால் புத்துயிர்பெறுமாறு செய்த காலஞ்சென்ற கவியரசர் சுப்ரமணிய பாரதியாரே அவராவர். அவரதுசிரார்த்த தினத்தை முன்னிட்டுச் சென்ற ஞாயிறன்று சென்னையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றிருக்கிறது. அவரது ஞாபகார்த்ததினமஒவ்வொரு ஊரிலும் கொண்டாடப்படவில்லையே என நாம் பெரிதும் வருந்துகிறோம். தமிழ்த்தாயின் அருந்தவப் புதல்வரும், தாய் நாட்டிற்குத் தன் கவிகள் மூலம் அருந்தொண்டியற்றியவரும், அதிகாரிகளின் கோபத்திற்கிலக்காகிப் பல துன்பங்கள் அனுபவித்தவருமான அப் பெரியாருக்குத்தமிழகத்தார்மட்டுமல்ல இந்தியரனைவருமே கடமைபபட்டுள்ளார்கள். இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்ஸ் போன்ற சுதந்திர நாட்டில் அவர் பிறந்திருப்பாராயின் அவர் எத்தகைய உன்னத நிலை படைத்திருப்பாரென்பதை நாம் கூறத் தேவையில்லை. தமிழ்ச்சிறார்கள் ஒவ்வொருவரும வீரம ததும்பும அவரது தேசிய கீதங்களைப், பயின்று தேச பக்தர்களாக விளங்குமாறு செய்வதே நாம அவருக்குச் செய்யும தக்க கைமமாறாகும.

---



# காந்தி விஜயம்.

### கூடலூர்.

நாளிது ஆவணித்திங்கள் 24ம்நாள் வெள்ளிக்கிழமை இரவு 3-30 மணிக்கு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் கூடலூருக்கு காந்தியடிகளும் அவரது சகாக்களும் வந்து சேர்ந்தனர். காலை 6 மணிவரை அங்கேயே தங்கியிருந்தனர். பின்னர் திருப்பாதிரிப்புலியூருக்கு அழைத்துச் சென்றனர். அங்கு திரு தீ. நா. முத்தையா செட்டியாரவர்கள் பங்களாவில் தங்கினர். திரு செட்டியாரின் சார்பாக ரூ. 400 அடங்கிய பணப்பையொன்று சமர்ப்பிக்கப்பட்டது. நகரபரிபாலன சபையார் மகாத்மாவுக்கு வரவேற்புப்பத்திரமொன்று படித்துக் கொடுத்தனர். வாலிபக்கிறிஸ்தவ சங்கத்திற்குச் சென்றார். கூடலூர் மாணவர்களது சார்பாகவரவேற்புப்பத்திரமும் ரூ. 150 அடங்கிய பணப்பையும் சமர்ப்பிக்கப்பட்டது. மாலையில் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. மகாத்மா அவர்கள் ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதில் பிராமணர் பிராமணரல்லாதார் வேற்றுமையைப் பற்றிக் குறிப்பிட்டார்.

### சிதம்பரம்.

ஞாயிற்றுக்கிழமை காலை மகாத்மா முதலியோர் சிதம்பரம் வந்து சேர்ந்தனர். நந்தனார் கலவிச்சாலைக்கு அழைத்துவரப்பெற்றார். ஸ்வாமி ஸகஜானந்தர் அவரை வரவேற்று மேடைக்கு அழைத்துச் சென்றார். ஓர் உபசாரப்பத்திரம் படித்துக் கொடுக்கப்பட்டது. நந்தனார் கோயிலுக்கு காந்திஜி அஸ்திவாரக்கல் நாட்டினார். வரவேற்புக்கு விடையாக ஓர் சொற்பொழிவு நிகழ்த்துகையில், அப்பள்ளிக்கூடத்தில் கதர் நூலைத்தவிர வேறெதுவும் உபயோகப்படுத்துவதில்லையென்றால் அதற்குத் தன்னாலியன்ற உதவி செய்வதாகக் கூறினார்.

### சத்தியாக்கிரகம்.

பெண்ணாடத்திற்கு மகாத்மா விஜயம் செய்யாதவாறு சிலர் சூழ்ச்சி செய்ததை முன்னிட்டு சுமார் ஆயிரம் ரூபாய் வசூல் செய்துவைத்திருந்த அவ்வூர் வாசிகள் மகாத்மா கூடலூரில் கிறிஸ்தவ வாலிபர் சங்கத்திலிருந்து வருகையில் மோட்டார் முன் படுத்துக்கொண்டு சத்தியாக்கிரகம் செய்தனர். மோட்டாரை நிறுத்தி விசாரித்ததும் மகாத்மாவோடு தென்னாப்பிரிக்காவில் கலந்து வேலை செய்த ஸ்ரீமான் அமிர்தலிங்கம் பிள்ளை மகாத்மாவினிடம் ஓர் கடிதம் கொடுத்தார். அதில் சத்தியாக்கிரகத்திற்குக் காரணம் விளக்கப்பட்டிருந்தது.

### மாயவரம்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு மகாத்மாவும் ஏனையோரும் மாயவரம் வந்து சேர்ந்தனர். திங்கட்கிழமை மௌனமாகையால் பொதுக்கூட்டம் உபசாரப்பத்திரம் கொடுத்தல் முதலிய எதற்கும் ஏற்பாடுகள் செய்யப்படவில்லை. செவ்வாய்க்கிழமை வரை மாயவரத்தில் தங்கிவிட்டுப் பின்னர் கும்பகோணம் சென்றார்.

---

### தேவகோட்டை.

ஒரு திருத்தம்:-சென்றவாரம் வெளியான தேவகோட்டைச் செய்தியில் "தாலூகா போர்டு கூட்டத்தில் திரு. என். எஸ். வெங்கட்டராமய்யரவர்களை ரிட்டர்னிங் ஆபீசராக ஒருவர் பிரேரணை செய்தார்." என்றிருப்பது உண்மையன்று. திவான்பகதூர் முருகப்ப செட்டியாரவர்கள் வரும்வரை மெம்பர்கள் உள்ளே வரவில்லையாதலால் கூட்டமே அதற்கு முன் நடைபெறவில்லை, என்று ஒருவர் அறிவிக்கிறார்.

# தந்திச் செய்தி.

பினங்கு, ஆவணி மீ ௨௯உ

| | |
|---|---|
| உண்டியல்விலை. | நூற்றுஐம்பத்து நான்கு. |
| ஈயம் விலை. | நூற்று நாற்பத்திரண்டு. |
| ரப்பர் விலை. | எழுபத்தாறு. |

சைகோன், ஆவணி மீ ௨௯உ

| | |
|---|---|
| உண்டியல்விலை. | நூற்றுமுப்பத்து நான்கு. |
| சிங்கப்பூர் வட்டம். | பதினாறு. |

---

# உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம். | 0-௩-0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம். | ௧-0-0 |
| பவுன் விலை. | ௧௩-௯-0 |
| வெள்ளி ௧00 ரூபா எடை. | ௫௯-௧௨-0 |

அடிகளின் விஜயம்:— புரட்டாசி மாதம் 5-ம் நாள் கதர் அரசர் காந்தியடிகள் திருச்சியிலிருந்து இவ்வூருக்கு நோக விஜயம் செய்கின்றார். இத்தனவணிக நாட்டின் சுற்றுப்பிரயாணத் திட்டம் தயாரிக்கவும் அவர்களது வரவேற்பு சம்பந்தமாக இதர ஏற்பாடுகள் செய்யவும் புரட்டாசி மாதம் முதல் தேதி மாலை 4-மணிக்கு இவ்வூர் வாசகசாலைக் கட்டிடத்தில் ஓர் பொதுக்கூட்டம் கூட்டப்படும். அன்பர்கள் அனைவரும் விஜயம் செய்யுமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். இந்நாட்டிலுள்ள முக்கியமான ஊர்களுக்கெல்லாம் மகாத்மா விஜயம் செய்வார் என எதிர்பார்க்கப்படுகின்றது. ஆங்காங்கேஉள்ளநண்பர்கள் கதர்நிதிக்கு ஏராளமாகப் பொருள் உதவ வேண்டும். காந்தியடிகள் வரவேற்புத் தொண்டர் படையில் சேர விரும்புவோர், தொண்டர் படைத்தலைவர் காரைக்குடி திருவாளர் சா. கணேசச் செட்டியாருக்குத் தெரிவித்துச் சேர்ந்துகொள்ள வேண்டும், என வரவேற்பு சபைக் காரியதரிசி எழுதுகிறார்.

கதர் நிதி:—இவ்வூரில் சில வாரங்களாக நாடகம் நடத்திக்கொண்டிருக்கும் ஸ்ரீமீனம்பிகா நாடகக் கம்பெனியார் காந்தி வரவேற்புக் கழகத்தாரின் வேண்டுகோளுக்கிணங்கி சென்ற ஞாயிற்றுக்கிழமை டம்பாச்சாரி நாடகம் ஆடி, வசூலான தொகையில் செலவு போக மீதத்தில் பாதித்தொகையை காந்தி கதர் நிதிக்கு அளித்தனரென்றும், கட்டணம் இதற்கென உயர்த்தப் பட்டிருந்ததென்றும், இதற்கென பல அன்பர்கள் நாடக டிக்கட்டுகள் அதிகமாக விற்குமாறு பெரும் பிரயாசை யெடுத்துக்கொண்டனரென்றும் ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

கோவாப்ப ரேடிவ் ஸ்டோர்ஸ்:— இந்த கோவாப்ப ரேடிவ் ஸ்டோர்ஸ் என்கிற கூட்டுறவுப் பண்டகசாலை சென்ற ஆவணி மீ ௨௨உ புதன்கிழமை நல்லதினமென்று திறக்கப்பட்டு வேலை துவங்க ஆரம்பித்து விட்டது, எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

---

# கப்பற் செய்தி.

"எரின்புரா"க் கப்பல் நாளிது ஆவணித்திங்கள் ௩௧-ம நாள் வெள்ளிக்கிழமை சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படுகிறது.

"டைரியா"க் கப்பல் நாளிது புரட்டாசித் திங்கள் முதல் நாள் சனிக்கிழமை நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

"ரஜூலா"க் கப்பல் நாளிது புரட்டாசித் திங்கள் ௨-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

# ஒற்றுமை மகாநாடு.

நாளிது செப்டம்பர்மாதம் 9-ந்தேதி சிம்லாவில் 'பிரம்ம சமாஜ் மந்திரத்தில் இந்து-முஸ்லீம் மகாநாடுகூடிற்று. பல தலைவர்கள் விஜயம் செய்திருந்தனர். சப்கமிட்டியார் ஏகமனதாய் சில சிபார்சுகள் செய்திருப்பதாக ஸ்ரீ ஜின்னு அறிவித்திருக்கிறார்.

சப் கமிட்டி சிபார்சுகள் வருமாறு:-

(க) இரு சமூகங்களுக்கும் உள்ள வேற்றுமைகள் எல்லாவற்றையும் களைந்து, ஒரு வகை மார்க்கம் தேடவேண்டியது இம்மகாநாட்டின் நோக்கம்.

(உ) இரண்டு சமூகத்தாரும் அனுப்பியிருக்கும் விவாதத்திற்குரிய விஷயங்களில் பொதுவாய் உளளவற்றை முதலில் எடுத்துக்கொள்ளவேண்டும.

(ந) இதற்கு ஒரு கமிட்டி நியமிக்க வேண்டுமமன்று கருதுகிறோம். ஆகவே, இந்த வேலைகளுக்கு ஒவ்வொரு சமூகத்திலிருந்தும சில தலைவர்களைப பொறுக்கி யெடுத்து அவர்கள் ஒவ்வொரு விஷயத்திலும் என்ன முடிவு செய்கிறார்களோ அதை அந்தந்த சமூகங்கள் ஏற்றுக்கொள்ள அனுப்ப வேண்டும. இவ்வாறு நியமிக்கபபட்ட ஹிந்து முஸ்லீம் சீக்கியத்தலைவர்கள அடங்கிய கமிட்டி விவரம வருமாறு:-

### இந்துக்கள்.

வங்காளம்:-ஸ்ரீ ஹரீந்திரநாத தத்தர் அல்லது ஸ்ரீ ராமாநந்த சாட்டர்ஜி, ஸ்ரீ. எஸ். சி. மித்திரர் அல்லது ஸ்ரீ அகில சந்திர தத்தர், ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் அல்லது ஸர். பி. சி. ராய்.

பேகார்:-ஸ்ரீ மோர கங்கா நந்த சின்னு; பாபு ஜகத் நாராயணலால் அல்லது பாபு ராஜேந்திர ப்ரசாத்

மத்திய மாகாணம்:-டாக்டர் மூஞ்சே அல்லது ஸ்ரீ ஆனே.

சென்னை:-ஸ்ரீ ஸ்ரீனிவாச ஐயங்கார், ஸ்ரீ பிரகாசம், ஸர். சங்கரன் நாயர் அல்லது ஸர். சிவசாமி ஐயர்.

மகாராஷ்டிரம்:-ஸ்ரீ கேல்கர்.

பம்பாய்:-ஸ்ரீ ஜயகர், ஸர். மனமோகனதாஸ் ராம்ஜி அல்லது ஸ்ரீ வல்லபாய் படேல்.

சிந்து:-ஸ்ரீ ஜெயராம் தாஸ் தௌலத்ராம் அல்லது டாக்டர் ஜோதிராம் பிரதாபராம்.

அஸ்ஸாம்:-ஸ்ரீ சதிஷ் சந்திரசின்னு.

ராஜபுதனம:-ஸ்ரீ ராய் ஹரிவிலாச சாரதா.

டெல்லி:-ஸ்ரீராய் கிதர்நாத்,

ஐக்கிய மாகாணம்:-ஸ்ரீ மதன மோகன மாளவியா, ராஜா ராம்பால் சிங், ஸ்ரீ சிந்தாமணி அல்லது ஸ்ரீ திவான்ஜி திசன சந்திரன்.

பஞ்சாப்:—லாலா லஜபதிராய், மகாத்மா ஹன்ஸ்ராஜ் அல்லது ஸ்ரீ பததிரிதாஸ், ராஜாநரேந்திரநாத், கனம லாலா ராமசரன்தாஸ், டாக்டர் கோகுல சந்திர நாரங்கர்.

வடமேற்கு எல்லைப்புற மாகாணம்: ஸ்ரீ தாகூர் தத்தாவான் அல்லது ஸ்ரீ பெலிராம, ஸ்ரீ கர்ம சந்திரன் அல்லது ஸ்ரீ மர்சந்திரலா ஹன்னு.

### சீக்கியர்கள்.

சர்தார் கரக்சிங், சர்தார் சர்தார்சிங், சர்தார் மங்களசிங், சர்தார் பூதசிங்.

### முஸ்லீம்கள்.

ஸர் முகமது ஷாபி, ஸர், இப்ராஹீம ரஹிம்துலா, அல்லது சர்தார் சுலைமான் காசிம மித்தர், ஸர். அப்துல் ரஹீம், ஜனுப் ஜின்னு, ஹக்கீம் அஜ்மல் கான், டாக்டர் சையாபுதீன் ஆமத், டாக்டர் அன்சாரி, மௌலானுமுகமது அலி, மியான் பஷீர் முகமது ஆமது, ஸ்ரீ ஸாலிமிகர் அலிகான், டாக்டர் கிச்லு, மௌல்வி முகமது யாகூப், நவாப் ஸர். அப்துல் கயூம், மௌல்வி முகமது ஷாபி, மௌலானு அப்துல் கலாம் அஸத், நவாப் முகமது இஸ்மேல்கான், மலிக்பர்கத்அலி, மௌல்வி அப்துல் காதர்சித்திக, சர்தார் ஹிபி புல்லா, ஸ்ரீ அப்துல் அஜிஸ், பிஷாவர் மௌலானு ஹஸன்ஆமத், ஸ்ரீ அப்துல் மஜீத், மௌலானு சையத்முர்த் துஸா, ஹாஸேன் பாய் சுகாவர்தி, ராஜா கஸ்னபர் அலிகான், மௌல்வி அப்துல் காதர் அல்லது ஸ்ரீ அப்சல் ஹிக், அப்துல்மதின் சௌத்ரி.

யோசித்து முடிவு செய்யவேண்டிய விஷயங்களைப்பற்றி இரு சமூகத்தினரும் அறிவித்திருக்கின்றனர்.

# மதிப்புரை.

### சிவநேசன்.

இப்பெயர் கொண்ட வாரப்பத்திரிகை யொன்று பலவான்குடியிலிருந்து சிவநேசர் திருக்கூட்டச் சார்பில் சென்ற இரண்டு வாரங்களாக வெளிவருகின்றது. இதன் முதலிரண்டிதழ்கள் வரப்பெற்றோம். சைவசமய வளர்ச்சிகருதி வெளிவருவதாக இதன் ஆசிரியர் அறிவித்துள்ளார். எம்மதத்தையும் தனக்கு சோபானமாக்கி உயர்ந்து நிற்பதென அறிஞர்களாற் கூறப்பெறும்உண்மை நன்னெறியான சைவநெறியை வளர்க்கத்தோன்றிய இப்பத்திரிகைக்கு வாழ்த்துக்கூறுகிறோம். தென்னாட்டில் இதுகாறும் சைவசமய வளர்ச்சிக்கெனக் காணப்பெறற பத்திரிகைகள் பலப்பல. அவற்றுள் இன்று உயிரோடு நிலவுவன இரண்டொன்றே. சைவநெறி வளர்ச்சிக்கு முன்வந்தோர் பலர் ஏனைய சமயங்களைப் பழித்தும் இழித்துங் கூறுவதையே சமயவளர்ச்சியெனக்கருதினா. சமயநெறிபறறும மக்கள் மேன்மையடையும் வழியில் செல்லாது பிறரைத் தூற்றுவதுதான் சைவநெறி வளர்ச்சி யெனக் கொண்ட பிறழ்ந்த உணர்வால்சைவவொளி மங்கி நிற்கின்றது. சைவரென்று கூறப்படுவோருள் நூற்றுக்கு இருவர்கூட சமய உணர்வுடையாராகக் காணப்படவில்லை. சிவஞான போதமும் சித்தியாரும் பிற தத்துவ நூல்களும் செய்து நிற்கும் ஒளியைப் போலித்தலபுராணங்களும் சுமார்த்தச் சடங்குகளும் பொய்க்கதைகளும் புகுந்து மறைத்து நிற்கின்றன. குப்பைகளை நீக்கிக் கோபுரத்தை வெளிப்படுத்துதல்வேண்டும். இதற்கென நமது தனவணிக நாட்டில் தோன்றியுள்ள 'சிவநேச'னுக்கு நல்வரவு கூறுகிறோம. சிறிய அளவில் (Foolscap) எட்டுப் பக்கங்கள் உயர்ந்த காகிதத்தில் அழகாக அச்சிடப்பெற்று விளங்குகின்றது. வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூபாய் மூன்று. வெளிநாட்டுக்கு ரூபாய் நான்கு. விலாசம்:—மானேஜர், சிவநேசன், பலவான்குடி.

---

**காந்தி வருகிறார் —**
**— கதர் கட்டுங்கள்.**

## வாரக்கடிதம்.

மகாத்மா காந்தியடிகளோடு சுற்றுப்பிரயாணம் செய்துவரும் திரு. மகாதேவ தேசாய் அவர்கள் ஒவ்வொருவாரமும் "வாரக் கடிதம்" என்ற தலைப்பில் 'யங் இந்தியா' பத்திரிகைக்கு ஆங்காங்கு நிகழும் நிகழ்ச்சிகளின் குறிப்புக்களை எழுதிவருகின்றார். இவ்வாரத்திய வாரக்கடிதத்தின் சுருக்கம் வருமாறு:—

உண்மையான சுற்றுப்பிரயாணம் இப்பொழுதுதான் துவங்கியிருக்கின்றது. தமிழ்நாட்டில் உஷ்ணம்தாங்கமுடியவில்லை. ஜனக் கூட்டமும் அதிகம். மைசூரில் சுற்றுப்பிரயாணம் செய்வது சுகமாக இருந்தது. சீதோஷ்ண நிலை மனதிற்கு ரம்மியமாக இருந்தது. ஜனக்கும்பலும் தமிழ்நாட்டைப்போல் அவ்வளவு அதிகமில்லை. மைசூரைவிட்டுப் புறப்படுவதற்கு மூன்று தினங்களுக்குமுன் சேலம் ஜில்லாவிலுள்ள ஹோஸூர், கிருஷ்ணகிரி முதலிய விடங்களை முடித்துவிட்டோம். அவைகள் மைசூருக்கு வெகுசமீபம். பெங்களூரிலிருந்து வடஆற்காடுஜில்லாவைச் சேர்ந்த வேலூர், ஆரணி, ஆற்காடு, குடியாத்தம் முதலிய விடங்களுக்குச் சென்றோம்.

இந்து முஸ்லீம் சச்சரவுப்பேச்சு இங்கு வந்ததும் கேட்கத் துவங்கிவிட்டது. வரவேற்புக் கமிட்டியில் முஸ்லீம்கள் எவரும் சேர்த்துக் கொள்ளப்படவில்லையென்று கிருஷ்ணகிரியில் எங்களிடம் அறிவிக்கப்பட்டது. குடியாத்தத்தில் படித்துக் கொடுத்த வரவேற்புப் பத்திரத்தில் "உங்களுக்கு நோய் வந்தது தெய்வாதீனமாக எங்களுக்கு நல்லதாக நேர்ந்தது. உங்களது முந்திய சுற்றுப்பிரயாணத் திட்டப்படி வந்திருப்பின் எங்களது ஒற்றுமைக்குறைவைக் கண்டுபெரிதும் வருந்தியிருப்பீர்கள்" என்று குறிப்பிட்டிருந்தனர்.

குடியாத்தத்தில் ஜனத்திரள் வெகுவெகு அதிகம். அவர்களனைவரும் காந்திஜி தங்கியிருந்த பங்களாவைச் சூழ்ந்துகொண்டனர். காந்திஜியைத் தரிசிக்க வேண்டுமென்பது அவர்களது அவா. ஜன்னல்களையெல்லாம் அடைத்துப் பகலிலேயே விளக்குகளின் உதவியை நாடவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. எனினும் அவர்களிடும் சத்தத்தை எவ்வாறு தடைசெய்வது? இறுதியாக காந்திஜி அக்கட்டிடத்தினின்றும் வெளியேறி மோட்டாரில் சில மைல்கள் சென்று காரிலேயே இளைப்பாறிக்கொள்ளும்படி நேர்ந்துவிட்டது. மாலையில் கூட்டத்தில் 25-ஆயிரம் ஜனங்கள் கூடிவிட்டனர். ஸ்ரீஜத் ராஜகோபாலாச்சாரியார் மத்தியான முழுதும் தொண்டை வறண்டுபோகுமாறு கதறியும் சத்தத்தை அடக்கமுடியவில்லை. காந்திஜி கூட்டத்திற்கு வந்ததும் சத்தமெல்லாம் அடங்கிவிட்டது. 4 அல்லது 5 ஆயிரம் ஸ்திரீகள் குழுமியிருந்தனர். காந்திஜி வந்ததும் அவரைத் தரிசிக்கும் பொருட்டு எல்லோரும் எழுந்தனர். ஆனால் ஆரணியில் ஜனங்கள் வெகு அமைதியாக நடந்துகொண்டனர். காந்திஜி கூட்டத்தைவிட்டுச் சென்றதும் தீண்டத்தகாதவர்களெனப் படுவோரில் சிலர் வந்தனர். கந்தைகளை சிறிது அணிந்தவர்களாகவும் காந்திஜியினிடம் தங்களது வணக்கத்தைத் தெரிவிக்கமுடியவில்லையே என ஏங்கி மனமுடைந்து போனவர்களாகவும் காணப்பட்டார்கள். அவர்கள் கொடுத்த ஐந்து ரூபாய் நோட்டை ஸ்ரீஜத் ராஜகோபாலாச்சாரியார் வந்தனத்துடன் பெற்றுக்கொண்டு, குடியையும், மாட்டிறைச்சி புசிப்பதையும் அவர்கள்விட்டுவிட வேண்டுமென்ற காந்திஜியவர்களின் போதனையை அவர்களுக்குத் தெரிவித்தார். ஆங்காங்கு திருப்தியான அளவுக்குப் பணப்பைகளும் வழங்கப்பெற்றன.

வேலூரில் குறிப்பிடத்தக்க சில கூட்டங்கள் நடைபெற்றன. வூர்ஹீஸ் காலேஜ் மாணவர்களுக்கென ஓர் கூட்டம்நடந்தது. அக்கூட்டத்திற்கு அக்கலாசாலைத் தலைவர் மிஸ்டர் போர் என்பவர் தலைமைவகித்தார். ஒரு வாரத்திற்கு முன்னதாக அவரது குழந்தை இறந்துபோயிருந்தது. அத்துக்கத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் அவர் தலைமை வகித்தார். அக்கூட்டத்தில் மனத்தூய்மையையும் நன்னடக்கையையும் மாணவர்கள் விருத்திசெய்ய வேண்டுவதைப்பற்றியே காந்திஜி பெரிதும் பேசினர். வாழ்க்கை விஷயங்களைப்பற்றியும் கதரைப்பற்றியும் அக்கலாசாலைத் தலைவர் காந்திஜியவர்களோடு நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார்.

வேலூரில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் காந்திஜி பேசியதன் சுருக்கம் வருமாறு:—

முன்னர் ஷவுக்கத்தலியும் நானும் இவ்வூருக்கு வந்தது எனக்கு நினைவுக்கு வருகின்றது. அப்பொழுது இருந்த நிலையென்ன? தற்பொழுதிருக்கும் வருந்தத்தக்க நிலையென்ன? இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவரையொருவர் தாக்கிக் கொலைசெய்துகொண்டபோதிலும் (அங்ஙனம் நிகழாதவாறு கடவுள் காப்பாராக! எனக்குக் கடவுளிடம் நம்பிக்கை இருக்கும் வரையும் இந்து முஸ்லீம் ஒற்றுமையிலும் எனக்கு நம்பிக்கையிருந்துவரும் இந்துக்களும் முஸ்லீம்களும் தோளோடு தோளாக நின்று ஒற்றுமையாக வாழக்கூடிய காலம் வருமென்ற திடமான நம்பிக்கை எனக்கிருக்கிறது. அந் நம்பிக்கையை வேலூர் வாசிகளான நீங்களும் பகிர்ந்துகொள்ள வேண்டுகிறேன். கடவுளின் பெயரால் ஒருவரையொருவர் கழுத்தை முறித்துக்கொள்ளுமாறு நாம் எவ்வளவு மருகத்தனமாகவும், முட்டாள்தனமாகவும் இருந்திருக்கிறோமென நினைத்து நமது பின் சந்ததியார்கள் நம்மை எள்ளி நகையாடுவார்களென்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. இந்து முஸ்லீம் ஒற்றுமை எவ்வளவு அவசியமோ அதைப்போலவே நூல்நூற்றலும் கதர் தரித்தலும் அவ்வளவு அவசியமாகும். இந்து முஸ்லீம் ஒற்றுமை அவ்விரு சமூகத்தினரையும் எவ்வாறு பிணைக்கின்றதோ அதைப்போலவே நாம் இராட்டினத்தில் நூற்கும் நூலும், பசிப்பிணியால் வருந்தும் கோடிக்கணக்கான நம் நாட்டு மக்களையும் மத்திய வகுப்பாரான நம்மையும் ஒன்றாகப் பிணைக்கிறது.

### நமது கோயில்கள்.

தீண்டாமையைப்பற்றி இப்பிரசங்கங்களில் பெரிதும் குறிப்பிட்டார். 'உங்களது கடவுளைப்பற்றி நீங்கள் தவறான அபிப்ராயங் கொண்டிருக்கின்றீர்கள். உங்கள் கோயில்களுக்குள் ஒரு சாரார் பிரவேசிப்பதால் கடவுளது பரிசுத்தத் தன்மை போய்விடுமென எண்ணுகின்றீர்கள். அவர்களை அவர் பரிசுத்தவான்களாக ஆக்கவேண்டுமென்று எண்ணுவதில்லை' என்று ஆற்காட்டில் கூறினர். 'ஓர் சிறு கந்தைத் துணியையாவது, ஓர் தேங்காயையாவது அல்லது வேறு எதையாவது கோயில்களிலிருந்து பிரசாதமாகப் பெற விரும்புகிறீர்கள். அந்தோ! அக்கோயில்களினின்றும் பரிசுத்தத் தன்மை பறந்தோடிப் போய்விட்டதே! உங்களது பக்தியையும் ஊக்கத்தையும் கதர் விஷயத்தில் திருப்பும்படி உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். உயிருள்ள தரித்திர நாராயணன் வீற்றிருக்கும் கோயில்களில் கதர் நூற்று நெய்யப்படுகின்றன. நமக்கும் பொதுஜனங்களுக்கும் இடையே இருந்துவரும் பெரும் தடையை அகற்ற வல்லது இதுவே. நீங்கள் கதரணிவீர்களாயின் உங்களையும் உங்களது கோயில்களையும் நீங்கள் பரிசுத்தம் செய்துகொள்ளலாம். இதன் பயனாக தீண்டாமையும் எவ்வாறு அகலுமென்பது நான் இப்பொழுது கூறத்தேவையில்லை.'

### மௌனஸ்வாமிகள்.

சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டு போனால் பேரும் புகழும் பெறாது தன்னலமறுப்புடன் உண்மைத்தொண்டு செய்துவருவோர்கள் பலரைக் காணலாம். அத்தகைய ஒருவரை வேலூரில் சந்தித்தோம். சென்ற 35ஆண்டுகளாக அவர் மௌனமாக இருந்துவருகிறார். பேசுவதில்லை. அவர் பிரம்மச்சாரி அவர் செல்லுமிடங்களிலெல்லாம் ஜனங்களுக்குத் தொண்டு செய்வதே அவரதுவேலை. சிறுவர்கள் முதல் வயோதிகர்வரை அனைவரும் அவரைத் தெய்வமாகக் கொண்டாடுகின்றனர். அவரது பெயர் எனக்குத் தெரியாது. அவரது வாழ்க்கை சம்பந்தமான சிறிய விஷயங்களைப் பற்றி எழுதிக்கேட்டால் அவர் பதில் கூறுவதில்லை. ஒழுங்காக இராட்டினத்தில் அவர் நூல் நூற்பவர் கடந்த சில ஆண்டுகளாகக் கதர் வேலையிலேயே தனது காலம் முழுதையும் செலவு செய்து வருகிறார். ஆற்காட்டில் கட்சிப் பிரதி கட்சிகள் இருப்பதாகவும் காந்திஜியின் விஜயம் வெற்றியாக நடைபெறாமலிருக்கலாமென யாரோ ஒருவர் கூறினர். 'பரவாயில்லை' என்று எழுதிக்காட்டி விட்டு இரவே அவ்வூரையடைந்து சமாதானம் உண்டாக்கிவிட்டார்.

## மணிவாசகம்.

காந்தியடிகள் 'யங் இந்தியா'வில் எழுதுவது:—

"மதுவகைகள் முதலியன வைத்திருத்தல் உற்பத்தி செய்தல் ஆகியன சம்பந்தமாக தற்போதுள்ள கலால் சட்டத்தை மாற்றுவதனால் அநேகமாகப் பொதுஜனங்களைத் துன்புறுத்த வேண்டியதாயிருக்கும் எனும் விஷயத்தை நீங்கள் நன்கு உணர்ந்து கொள்ள வேண்டுகிறேன். மதுவிலக்கு முறையைக் கையாளுவதன் பயனாக நேரிடும் அத்துன்புறுத்துதலை ஏற்றுக்கொள்ள நீங்கள் தயாராயிருக்கவேண்டும். அப்படியாயின் நான் உங்களது தளரா உதவியை எதிர்பார்த்திருக்க வேண்டும். குடிவகைகளால் ஏற்படும தீங்குகளைப்பற்றிப் பிரசாரம் செய்வதற்காவது, மறியல் வேலைக்காவது அதுபோன்ற இதர வேலைகளுக்காவது உங்களது உதவி எனக்குத் தேவையில்லை. மதுவகைகளைத் திருட்டுத்தனமாக உற்பத்தி செய்வதையும் அதுபோன்ற இதர குற்றங்கள் இழைப்பதையும் தடை செய்யும் விஷயத்தில் உங்களது உதவியை நாடுகின்றேன்"

மேற் கூறியது சென்னை அரசாங்கக் கலால் மந்திரி ஓரிடத்தில் பிரசங்கம் செய்ததாக இந்துப் பத்திரிகையில் வெளிவந்திருப்பனவற்றின் ஓர் பகுதியாகும். அதிக வரி கொடுப்பதற்குத் தயாராயிருக்க வேண்டுமென்றும் பொதுஜனங்களை அவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். ஜனங்கள் அதிக வரி கொடுக்கச் சக்தியுள்ளவர்களாக இருக்கும் இடங்களில் அவசியத்தை முன்னிட்டு அதிக வரி கொடுக்கத் தயாராயிருக்க வேண்டுமென்பது தவிர இது குறித்து தற்பொழுது வேறெதுவும நான் கூறப்போவதில்லை. பூரண மதுவிலக்கு ஏற்படுவதை முன்னிட்டு எவ்வளவு பொருள் செலவு செய்ய நேர்ந்தாலும் அது அதிகமென்று கூற முடியாது.

எனினும், தற்பொழுது மேற்கூறியுள்ள பகுதி சம்பந்தமாக மட்டுமே எனது அபிப்பிராயத்தை வெளியிட எண்ணுகிறேன். பிரஸ்தாப மந்திரி மதுவிலக்கைப்பற்றித் தவறான அபிப்பிராயங் கொண்டுவிட்டாரோ என அஞ்சுகிறேன். அதனை (மதுவிலக்கை) ஒவ்வோர் பகுதியாக எடுத்துக்கொள்ளக் கூடாதென்பது எனது அபிப்பிராயம். வெற்றிபெறவேண்டுமாயின் அது முழுதையுமே எடுத்துக்கொள்ளவேண்டும். அது ஓர் ஜில்லாவைப் பொறுத்த விஷயமல்ல, அகில இந்திய விஷயமாகும். நீதிமுறைகட் கொவ்வாத இக்கலால் வருமானத்தை மாகாண அரசாங்கங்களுக்கு மாற்றி இந்திய இளைஞர்களின் கலவிக்கு மாசுபடிந்த இவ்வருமானத்தை உபயோகப்படுத்துமாறு இங்கிலாந்து அரசாங்கத்தார் செய்தது பெருந்தவறு என எனது அபிப்பிராயத்தைக் கூற நான் சிறிதும் தயங்கவில்லை.

பொது ஜனங்களது க்ஷேமத்தைப் பெரிதும்பாதித்துவரும்இவ்விஷயத்திற் றுணிப்புல் மேய்வதும்போல் மந்திரி பேசியிருப்பது தான் என் மனத்தைப் பெரிதும் துன்புறுத்துகின்றது. தான் செய்ய வேண்டிய போலீஸ் வேலையை (கண்காணிப்பு வேலையை)ப் பொது ஜனங்கள் செய்ய வேண்டுமென அவர் எதிர் பார்ப்பதாயின் அவரது மதுவிலக்குப் பரிகாரத்திட்டத்தில் அவர் அவ்வளவு உண்மையுள்ளவராயிருக்கவில்லை யென்பது திண்ணம். மதுவிலக்கு முறைகையாளப்படின் பொது ஜனங்களைத் துன்புறுத்த வேண்டியிருக்குமென ஜனங்களை அவர் ஏன் பயமுறுத்துகிறார்? களவு, திருட்டுத்தனமாக வெடிமருந்துகள் செய்தல் முதலியன குற்றச்செயல்களாகக் கருதப்பட்டிருப்பதால் பொது ஜனங்கள் துன்புறுத்தப்படுகின்றனரா? அரசாங்கத்தாரது அனுமதியின்றிச் சாராயங் காய்ச்சுவது இப்பொழுதும் குற்றச் செயலாகத் தானே இருந்துவருகின்றது? தற்பொழுது மதுவகைகள் தயாரிக்கவும், விற்கவும் அரசாங்கத்தாரிடமிருந்து அனுமதி பெற்றவர்கள் மதுவிலக்கு முறை கையாளப்பட்ட பின்னர் திருட்டுத்தனமாக மதுவகைகள் தயாரிப்பார்களென்றும் அதன் பயனாக ஜனங்கள் துன்புறுத்தப்படுவார்களென்றும் அம் மந்திரி எண்ணுகிறார் என்று கருதவேண்டியிருக்கிறது. இதில் ஜனங்களுக்கு எவ்வித தொந்திரவும் இருக்கக் காரணமில்லை.

மதுவிலக்கு முறையை அனுஷ்டிப்பதாக அறிவித்துவிட்டு சட்டத்தை மீறி நடப்பவர்களைக் கைது செய்வதைத் தவிர மதுவிலக்குக்காரர் என்ற முறையில் தான் வேறெதுவும் செய்யத் தேவையில்லையென அம்மந்திரி எண்ணுவாராயின் அது அவருக்குக் கற்பனாசக்தி இல்லை யென்பதையும் ஜனங்களிடம் அனுதாபம் இல்லை யென்பதையும் காட்டுமேயன்றி வேறல்ல. கைது செய்வது மதுவிலக்கு முறையில் மிக சிறிய அம்சமென்றும் அழித்தல் முறையாகுமென்றும் நான் திண்ணமாகக் கூறுவேன். மதுவிலக்கு முறையைக் கையாளுவதில் மிகப் பெரிய அம்சமும் ஆக்கல் முறையும் இருக்கிற தென்பதைத் தெரிவிக்கின்றேன். பொது ஜனங்கள் மிகுந்த கேவல நிலையடையுமாறு செய்யப்பட்டு விட்டதால் மதுவகைகளை யருந்துகின்றனர். தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் ஏனையோருமே குடிக்கின்றனர். அவர்கள் ஆதரவற்றவர்களாக விருக்கின்றனர். எவரும் அவர்களைக் கவனிப்பதில்லை. எனவே குடிப்பழக்கத்தைக் கைக்கொண்டு விடுகின்றனர். மதுவிலக்குக்காரர்கள் இயற்கையிலேயே எங்ஙனம் பரிசுத்தவான்களாக ஆய்விடுவதில்லையோ அதைப் போலவே அவர்களும் இயற்கையிலேயே கெட்டவர்களல்ல. ஜனங்களில் பெரும் பாலோர் அவர்களைச் சுற்றிலுமுள்ள நிலைமைக்கும் சந்தர்ப்பங்களுக்கும் தக்கவாறே பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுகின்றனர். மதுவிலக்கு முறையை வெற்றியுறக் கையாள வேண்டுமெனும் உண்மை அவாவுள்ள எம்மந்திரியும் சீர்திருத்தக்காரர்களது தன்மைகளையும் ஊக்கத்தையும் தன்னில் விருத்தி செய்து கொள்ள வேண்டும. பின்னர், சென்னை மந்திரி வெறுத்துத் தள்ளிய உதவியே அவருக்குத் தேவைப்படும். குடிவகைகளினால் ஏற்படும் தீங்குகளைப்பிரசாரம் செய்வோரும் அதுபோன்ற இதர வேலைகளைச் செய்வோரும், மறியல் வேலை செய்வோரும் அவருக்கு அவசியமாகத்தேவை என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். இவ் விஷயங்களுக்கே, அவருடன் சேர்ந்து குடிகாரர்களின் வாழ்க்கையைச் சீர்திருத்த ஏராளமான தொண்டர்கள் தேவைப்படும். தற்பொழுதுள்ள மதுக்கடை ஒவ்வொன்றையும் சிற்றுண்டிச்சாலையாக அவர் மாற்ற வேண்டும். அவைகளில் சங்கீதம் முதலிய களியாட்டங்களும் நடை பெறவேண்டும். ஏழைத் தொழிலாளர்களுக்குக் குறைந்த செலவில் போதைகள் தராத நல்ல பானங்கள் சாப்பிடவும் எல்லோரும் ஒன்றாகக் கூடவும் ஓரிடம் தேவையே. அத்துடன் நல்ல சங்கீதம் அங்கிருக்குமாயின் தொழிலாளர்களை அங்கிழுப்பதற்கு அது ஓர் சாதனமாயிருக்கும். இவைகள் நன்கு நிறமையாக நிர்வகிக்கப்பட்டுவரின் அவற்றின் மூலமாக அரசாங்கத்திற்கும் வரும்படி கிடைக்கும். மது விலக்கு முறையைக் கையாளுபவர்கள் அதில் பிரஸ்தாப மந்திரி செலுத்தி யிருப்பதாகக் காணப்படும் கவனத்தைக் காட்டிலும் அதிக கவனத்தைச் செலுத்தி விஷயங்களை அறிந்து கொள்ளவேண்டும். அமெரிக்க நாட்டினரால் அனுஷ்டிக்கப்பட்டு உலகின் பிற பகுதிகளிலுள்ள மது விலக்குச்சங்கங்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கும் முறைகளை அவர் படிப்பாராக! இப்படிப்பு அவருக்கு குறிப்பிட்ட அளவுக்குட்பட்ட உதவியை மட்டுமே செய்ய முடியும். ஏனெனில் மேனாடுகளின் நிலைமை இந்தியாவின் நிலைமைக்கு முற்றும்மாறுபட்டதாகும். எனவே நமது முறைகளும் பெரிதும் மாறுபட்டவைகளாகவே இருக்கவேண்டும். பூரண மதுவிலக்கை மேனாடுகளில் அனுஷ்டிப்பது இயலாத காரியம். ஆனால் இந்நாட்டிலோ வெகு சுலபமாக அனுஷ்டித்து விடலாம். மேனாடுகளில் குடி போன்ற தீச்செயல்கள் கௌரவத்திற்கு அறிகுறியாகக்கருதப்படுகையில் அதனை முற்றும் ஒழிப்பதென்பது சிரமசாத்தியமல்லவா? ஆனால் நம்மிடையோ, கடவுள் கிருபையால், குடிப்பழக்கம் இன்னும் தீமையாகவே கருதப்பட்டு பெரும்பாலோரிடை அத் தீயபழக்கம் பரவாமல் ஏழைமக்களான சிறு பான்மையோரிடை மட்டுமே பரவியிருக்கின்றது.

